உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 25 ] பராபவ - ஆவணி - 10—9—66 [ இதழ் 10

திருச்சிற்றம்பலம்

பொன்றயங் கிலங்கொளிர் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினுய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. (சம்பந்தர்)

திருச்சிற்றம்பலம்

## மாதிருக்கும் பாதியன்

உலகம் அறிவுடையதும், அறிவில்லதும் என இரு வகையாகக் காணப்படுகின்றது. மக்கள், விலங்கு, பறவை முதலிய உயிரினங்கள் அறிவுடை வகையின. குடம், ஆடை முதலியனபோன்ற சிறுபொருள்களும், நிலம், நீர் போன்ற பெரும்பொருள்களும் அறிவில்லாத வகையின. அறிவுடை யுலகமும் ஒருவகையாய் இல்லை. அஃது ஓரறிவுடையன ஈரறிவுடையன முதலாக ஆறறிவுடையன ஈருக உள்ள ஆறு வகையினை உடையதாகின்றது. ஆறறிவு உடையவை மக்களுயிரே. ஆறறிவே நிறைந்த அறிவு

எனின், மற்றையவை குறைந்த அறிவு என்பது சொல்ல வேண்டா. ஆகவே, மக்களையே, அறிவுடையவர் என்று கூறுகின்றனர்.

இனி, மக்கள் இனம் முழுதும் ஆறறிவுடையதாயினும் அதனுள் பிறந்த அனைவரும் 'அறிவுடையோர்' எனப்படுதல் இல்லை. மற்று, கல்வி முதலியவற்றால் சிறந்த அறிவைப் பெற்றவர்களே 'அறிவுடையோர்' எனப்படுகின்றனர். "அரியகற்று ஆசற்றார் கண்ணும் தெரியுங்கால் இன்மை அரிதே வெளிறு" என்ற திருவள்ளுவர் வாக்கின்படி, அறிவுடையோர்களும் சில சமையங்களில் அறியாமைக்கு உட்பட்டவர்களாதல் தெளிவு. இவற்றால், அறிவுடையுலகத்திலும் அறியாமை கலந்தே இருக்கின்றது என்பது விளங்கும்.

உலகம் முழுதும் இங்ஙனம் அறிவே இல்லாததாயும், குறைந்த அறிவை உடையதாயும் இருக்கின்றது என்றால், அறியாமை என்பதே இல்லாமல், நிறைந்த அறிவை உடைய பொருள் ஒன்று இருத்தல் வேண்டுமன்றோ? அதுதான் 'கடவுட் பொருள்' என்று சொல்லப்படுகின்றது. அந்தப் பொருள், அறிவே வடிவமானது - ஞான மயமானது. 'கடவுள்' என்றும், 'இறை' என்றும் பால்பகுக்காமல் கூறுகின்ற அப்பொருளை, உலக வழக்கின்படி உயர்வு தோன்ற, 'இறைவன்' எனப் பால்பகுத்து வழங்குதலே பெரும்பான்மை. இனி அதனை, 'இறைவன்' என ஆண் பாலாக வழங்குதலேயன்றி, 'இறைவி' எனப் பெண்பாலாகவும் வழங்குகிறோம். எனினும், அது பால் பகுப்பிற்கு உட்படாததேயன்றிப் பால் பகுப்பிற்கு உட்பட்டதன்று.

ஆண், பெண் என உலகத்திற் காணப்படும் பகுப்புக்கள் அற்று, எல்லாவற்றையும் கடந்து நிற்கின்ற அப்பொருளை, நம் அறிவிற்கு ஏற்ப, நாம் அறிந்து வரும் பொருள்களில் அகப்படுத்து வழங்குகின்றோம். அப்பெரும் பொருளும், நாம் அதனை அறிந்து பற்றுதற் பொருட்டு, நம் வழக்கத்தினை ஏற்றுக்கொண்டு அதற்கேற்ற வடிவத்தையும்,

செயலையும் உடையதாய்க் காட்சி யளிக்கின்றது. 'ஆண் பாலாய்க் காட்சி யளிக்குங்கால், 'இறைவன்' என்றும், பெண்பாலாய்க் காட்சியளிக்குங்கால் 'இறைவி' என்றும் கூறி வழிபடுகின்றோம். எனினும், இருவகை வடிவில் தோன்றுவதும் ஒரு பொருளே ; இருபொருளன்று.

ஆண், பெண் முதலிய பகுப்புக்களும், பிறவும் இன்றி எல்லாவற்றையும் கடந்து நிற்கின்ற அப்பொருள், இங்ஙனம் சில வடிவங்களையும், செயல்களையும் கொண்டு காட்சி யளித்தற்குக் காரணம் உயிர்களின்மேல்வைத்த கருணையே யன்றி வேறில்லை. கருணை அல்லது அருள் என்று சொல்லப்படும் குணம் அறிவின் தன்மையேயாகும். ஆதலின், அறிவில்லாத பொருளிடத்து அருள் இல்லையாம். அறிவுடைய பொருளிடத்தும அருள் அதன் அறிவின் அளவாகவே அமைந்திருக்கும் இறைவன் அறிவே வடிவ மானவன் ஆதலின், அருளே வடிவமாய் இலங்குகின்றான். ஆகவே, அவன் கொள்ளும் திருமேனி யாதாயினும் அஃது அருள்வடிவமே.

அறிவாயினும், அருளாயினும் அவை ஒரு பொருளின் தன்மையேயன்றித் தனித்து நிற்பன அல்ல. ஆதலின், 'ஞானம்' என்பதும், 'அருள்' என்பதும் கடவுளது தன்மைகள் என்பதும், கடவுள் அவற்றை உடைய பொருள் என்பதும் விளங்கும். கடவுட் பொருளை, 'சிவம்' என்றும், அதன் தன்மையை, சத்தி என்றும் வழங்குகிறோம்.

இறைவன் இவ்வாறு, தானும் தனது சத்தியும் என்னும் இருநிலைப்பட இயைந்து நிற்றலால், தான் கொள்ளும் திருமேனிகளிலும் தானும் தன் தேவியும் என்னும் இருவகை யில் விளங்குகின்றான். அத்திருமேனிகளில் அர்த்தநாரீசு வரன் என்னும் மாதிருக்கும் பாதியனாகிய வடிவம், சிவமும் சத்தியும் இருபொருளல்ல; ஒன்றே என்பதை இனிது விளக்குவது. "அருளது சத்தியாகும்" என்றபடி சத்தியா வது அருளேயாகலின், மாதொரு பாதியாகிய வடிவம், இறைவன் பேரருளாளன் என்பதையும் விளக்குகின்றது.

இது பற்றியே இத்தகைய வடிவம் ஏனைய தேவருக்கில்லாது, சிவபிரான் ஒருவனுக்கே உள்ளதாயிற்று. மாதொரு பாகனாகிய வடிவத்தின் பெருமையை இனிது விளக்கிப் புகழ்ந்து பாடும் திருப்பாட்டுக்கள் பல,

' தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையும் உடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ ''

என்னும் திருவாசகப்பாடல் இதனை, 'தொன்மைக்கோலம்' எனக் குறிப்பிடுகின்றது. ஞானசம்பந்தரும், "ஒருமை பெண்மை யுடையன் '' என்று அருளிச்செய்கின்றார்.

'' பெண்ணுரு ஒருதிறன் ஆகின்று ; அவ்வுருத்
தான்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும் ''

என வருதலைப் புறநானூற்றிலும் காணலாம். எனவே, இறைவனைப் பேரருளாளனாக அறிந்து வழிபடும் வழி பாட்டிற்கு இம்மாதிருக்கும் பாதியனாகிய திருமேனி இன்றி யமையாததாகின்றது.

மாதொரு கூறனாகிய வடிவத்தின் வரலாற்றைப் புரா ணம் பின்வருமாறு கூறும்:

' திருக்கயிலாயத்தில் சிவபெருமான் உமாதேவியோடும் வீற்றிருந்த காலத்தில் தேவர், முனிவர் முதல் யாவரும் சென்று அவ்விருவரையும் வணங்கி வாழ்த்தியபோழுது, 'பிருங்கி' என்னும் முனிவர்மட்டும் இறைவியை வணங்காது, இறைவனை மட்டும் வணங்கினார். அதனால் வெகுண்ட அம்மை அம்முனிவரிடத்தில் தனது கூறாய் அமைந்த உதிரம் முதலியவற்றை வாங்கிக்கொள்ள, முனிவர் நிற்கவும் வலிமை இல்லாது தள்ளாடினார். சிவபிரான் அவர் நிலைத்து நிற்க மூன்றாவதாக ஒருகாலைக் கொடுத்தார். அதனால் சிறிது மனம் வருந்திய அம்மை இறைவனிடம் விடை பெற்றுச் சென்று இமயமலைச் சாரலில் ஓர் இடத்தில் இருந்து கடுந்தவம் புரிய, சிவபெருமான் அம்மைமுன் தோன்றிக்

காட்சியளித்து, 'உனக்கு வேண்டுவது யாது?' என்று கேட்க, அம்மை. 'இனி நான் உமக்கு வேருய் இல்லாது ஒன்ருய் இருத்தல் வேண்டும்' என்று வேண்டினுள். சிவபெருமான், 'அவ்வாறே ஆகுக' என்று சொல்லி அம்மையைத் தமது திருமேனியின் இடப்பாதியில் என்றும் ஒன்ருய்க் கலந்து இருக்கும்படி கொண்டருளினர்'.

இத்தகைய அம்மையப்பர் வடிவம், சிவபெருமானும் உமாதேவியுமே உலகம் எல்லாவற்றுக்கும் அம்மையப்பர் என்பதையும் விளக்கி நிற்கின்றது. "அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர்" என்கின்றது திருக்களிற்றுப் படியார். அம்மையப்பர் வடிவமாகிய மாதிருக்கும் பாதியனுய உருவத்தை ஆண் என்பதா? பெண் என்பதா' என்று குமரகுருபரர் நயம்படப் பாடும் பாடல் ஒன்று இங்கு நினைவு கூரத்தக்கது.

அருவருக்கு முலகவாழ் வடங்க நீத்தோர்க்
    கானந்தப் பெருவாழ்வாம் ஆடல் காட்ட
மருவருக்கன் மதிவளிவான் யமானன் தீநீர்
    மண்ணெனுமெண் வகையுறுப்பின் வடிவு கொண்ட
ஒருவனுக்கும் ஒருத்திக்கும் உருவொன் ருல்அவ்
    வுருவையிஃதொருத்தனென்கோ வொருத்தி யென்கோ
இருவருக்கு முரித்தாக ஒருவ ரென்றோர்
    இயற்சொல்ல தெனின்யான்மற் றென்சொல் கேனே.

உடம்பிற்கு அம்மையப்பர் பிறவிதோறும் வேறுவேருய் இருந்து உடம்பை வளர்ப்பர். ஆனுல், இறைவன் உயிருக்கு என்றுமே அம்மையப்பனுய் இருந்து அறிவை வளர்க்கின்ருன். ஆதலின், அவனை என்றும் மறவாது நினைந்து வாழ்த்தி வணங்குதலே அறிவுடையோரது கடனுகும்.

முன்னனை மூவர்க்கும் முற்றுமாய் முற்றினுக்கும்
பின்னனைப் பிஞ்ஞகனைப் பேணு பெருந்துறையின்
மன்னனை வானவனை மாதியலும் பாதியனைத்
தென்னனைக் காவானைத் தென்பாண்டி நாட்டானை
அன்னனை அம்மானைப் பாடுதுங்காண் அம்மானய்.

திருச்சிற்றம்பலம்.

உ

குருபாதம்

திருத்தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் வழங்கியருளிய

# அருளுரை

---

## எவ்வுயிர்க்கும் கோ

தேவே ! மதுரைநகர்ச் சிற்பரனே ! எவ்வுயிர்க்கும்
கோவே ! எனையாளுங் கோவே ! என் — நாவே
உனைத்துதிக்கச், சிந்தை உனைநினைக்க, என்றும்
கனத்தில் உனை வணங்கக் காண்.

— குருஞானசம்பந்தர்.

உடம்போடு கூடி வாழும் உயிர்கள் பலவும் வாழும் உயிர்களே. என்றாலும், நல்வாழ்க்கையை உடைய மக்கள் உயிரே 'வாழும் உயிர்' எனப்படுகின்றது.

"எண்என்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்என்ப வாழும் உயிர்க்கு"

என்ற திருக்குறளில் திருவள்ளுவர் மக்களுயிரையே, 'வாழும் உயிர்' என்று குறிப்பிடுதலைக் காணலாம்.

நல்வாழ்க்கை என்பது உண்டி, உறையுள், ஆடை, அணிகலன்கள் முதலியவைகளை நல்ல வகையில் அமைத்துக்கொண்டு வாழ்வது மட்டும் அன்று, தன்னலத்திற்காகவோ, பிறவற்றிற்காகவோ மற்றவர்கட்கும், மற்றைய உயிர்கட்கும் கேடு சூழாமல் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப்பொருள்களைக் குறிக்கோளாகக்கொண்டு வாழும் வாழ்க்கையே நல்வாழ்க்கையாகும். இத்தகைய வாழ்க்கை மக்கள் இனத்திற்குத்தான் இருக்கின்றதேயன்றி மற்றைய உயிரினங்கட்கு இல்லை ; அதனால்தான், மக்கள் உயிரே, 'வாழும் உயிர்' எனப்படுகின்றது.

நல்வாழ்க்கையாகிய மக்கள் வாழ்க்கைக்கு, அனைவர்க்கும் பொதுவாகிய தலைமை ஒன்று இருத்தல் இன்றியமையாததாகின்றது. அந்தத் தலைமையே, அரசியல் அல்லது செங்கோல். எனவே, செங்கோல் இல்லையேல், மக்கள் வாழ்க்கையும் மாக்கள் வாழ்க்கையாகிவிடும் என்பது தெளிவு.

" வானோக்கி வாழும் உலகெல்லாம் ; மன்னவன்
கோல்நோக்கி வாழும் குடி "

என்கின்றார் திருவள்ளுவர். 'மற்றைய உயிர்களுக்கெல்லாம் இயற்கையில் அமைந்த மழை முதலிய வசதிகள் இருந்தால் போதும்; ஆனால், மக்கள் உயிர்க்கு அந்த இயற்கை வசதிகள் மட்டும் போதா ; அவர்கள் செயற்கையில் அமைத்துக்கொண்ட அரசியலும் வேண்டும்' என்பது இக்குறளின் பொருள்.

" நெல்லும் உயிரன்றே ; நீரும் உயிரன்றே ;
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம் "

என்று புறநானூற்றுப் பாடலும்,

" .........அனைவோர்க்கும் தெய்வம்
இலைமுகப் பைம்பூண் இறை "

என்று குமரகுருபர அடிகளும் கூறுவதும் 'மக்கள் வாழ்க்கைக்கு அரசியல் இன்றியமையாதது' என்பதைக் குறிப்பிடுதற்கேயாகும். 'இறைவனது அருளாணையே அரசியல் வடிவத்தில் இருந்து உலகத்தை நடத்துகின்றது' என்பதே சைவசித்தாந்தத்தின் முடிவு.

" அரசனும் செய்வது ஈசன் அருள்வழி "

என்று சிவஞானசித்தி கூறுவது காணலாம்.

" முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும் "

என்று திருவள்ளுவர் அரசனை, 'இறை' என்று குறிப்பதும் இக்கருத்தினால்தான். எனவே, கடவுள் காணப்படாத இறைவன் என்றால், அரசன் காணப்பட்ட இறைவனாகின்றான் என்பது விளங்கும். அரசன் ஆணை இறைவன் ஆணையே என்பதனால்தான், அவனது ஆணைக்கு உட்பட்டு நடத்தல் அறமும், அதனைக் கடந்து நடத்துதல் மறமும் (பாவமும்) ஆகின்றன.

" சக்கர நெறிநில் "

என்பது ஔவையார் வாக்கு. இவையெல்லாம் நீதியின் பொருட்டுத் தன்மகனையே தேர்க்காலில் இட்டுத் தனது தேரைத் தானே அவன்மீது செலுத்திய மனுச்சோழன், தன் கையைத் தானே வெட்டிக்கொண்ட பொற்கைப் பாண்டியன் போன்ற செங்கோல் தவருத மன்னர்களைக் குறித்துக் கூறியனவேயாகும். இத்தகைய செங்கோலாட்சியைச் செலுத்துவது எளிதான செயலன்று என்பதைச் சேக்கிழார்,

"ஒருமைந்தன் தன்குலத்துக் குள்ளான்என் பதும்உணரான்
தருமந்தன் வழிச்செல்கை கடன்என்று தன்மைந்தன்
மருமந்தன் தேராழி உறஊர்ந்தான் மனுவேந்தன்
அருமந்த அரசாட்சி அரிதோமற் றெளிதோதான்"

என்று பாராட்டிக் கூறுகின்றார்.

"மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்பம் அல்லது தொழுதகவுஇல்"

என்று சேரன் செங்குட்டுவன் கூறியதாக இளங்கோவடிகள் குறிக்கின்றார். இத்தகைய செங்கோல் அரசர்கள் இருப்பார் களாயின், அவர்களை ஏன் தெய்வம் என்று சொல்லுதல் கூடாது! மக்களும் அவர்களை ஏன் தெய்வம் என்று கொண் டாடமாட்டார்கள்!

மக்கள் இனத்திலன்றி, யானை முதலிய விலங்கினத்திலும், பறவை முதலிய மற்ற உயிரினத்திலுங்கூட அரசன் இருப்ப தாகக் கூறுகின்றனர். சிங்கத்தை, 'மிருகேந்திரன்' (விலங் கரசு) என்றும், கருடனை 'புள்ளரசு (பட்சிராஜன்) என்றும் கூறுதல் வழக்கு. இதனால், உயிர்கள் நன்கு வாழ்வதற்கு அரச னது செங்கோல் இன்றியமையாதது என்பது புலனாகும். எனவே அரசர்களால் பலவகை நன்மைகளை அடைந்து நல்வாழ்க்கை வாழும் மக்கள், அந்த அரசனிடத்தில் எவ்வளவு நன்றியும், கடமையும் உடையவர்களாய் இருத்தல் வேண்டும் என்பது தெளிவாகும்.

மன்னரும் மக்களே; அதனால், அவர்கள் எவ்வளவுதான் குடிகளுடைய நலத்தில் கண்ணும் கருத்துமாய் இருப்பினும் அவர்களை அறியாமல் குடிகட்குத் தீங்கு நிகழ்ந்தேவிடும். மேற்குறித்த மனுச்சோழன், பொற்கைப் பாண்டியன் வரலாறு

களே அதற்குப் போதுமான சான்று, எவ்வாறெனில், தங்களை அறியாமல் தங்கள் ஆட்சியில் நிகழ்ந்துவிட்ட தீமைக்குத் தீர்வாகத்தானே அவர்கள் மகனைத் தேர்க்காலில் இட்டதும், கையை வெட்டிக்கொண்டதும் ?

மேலும், மழை இன்மை, மிக்க மழை முதலிய இயற்கை நிகழ்ச்சிகள் மன்னரது ஆணைக்கு உட்படுவன அல்ல ; அதனால் குடிகளுக்கு - உயிர்களுக்கு நலம் செய்தல் என்பது மன்னர் களுக்கு ஓரளவே இயல்வதன்றி, முற்றிலும் இயலாது.

இனி, நாட்டில் நல்லோர்க்குத் தீங்கிழைக்கின்ற தீயவர் களைக் கண்டறிந்து அவர்களைத் தக்கவகையில் தண்டித்தலும் செங்கோல் வேந்தர்க்குச் சீரிய கடமையாகும். அதனையும் அரசர்கள் ஓரளவே செய்ய இயலும். ஆகவே, அனைவர்க்கும், அனைத்துயிர்க்கும் அவரவர் செய்திக்கேற்ற பயனைத் தந்து நன்முறையில் காப்பவன் இறைவனே. அதனால், அவன் அனைத் துயிர்க்கும் அரசனாய் உள்ளான் மக்களில் சிலருக்குத் தலைவ னாய் உள்ள அரசன், தான் நலத்தைப் பெற்றே குடிகளுக்கும் நலம் செய்வான். ஆனால் எவ்வுயிர்க்கும் தலைவனாகிய இறைவன் தன் நலத்தை நாடுதல் சிறிதும் இல்லை. எல்லாவற்றையும் உயிர் களின் பொருட்டே செய்கின்றான். அத்தகைய இறைவனை யாரேனும் நினைக்கின்றனரா ? நன்றி பாராட்டுகின்றனரா ? 'இல்லை' என்றே சொல்லலாம். இது பொதுமக்கள் இயல்பே. அறிவுடைய பெருமக்கள் அவ்வாறின்றி, யாவர்க்கும் முதல்வ னாகிய இறைவனைத்தான் மிகுதியாக நினைக்கின்றனர் ; வாழ்த்து கின்றனர் ; வணங்குகின்றனர். இன்னும் இந்த நிலைமையே நிலைத்திருக்க வேண்டும் என்பதையே இறைவனிடத்தில் வர மாகவும் வேண்டுகின்றனர் அத்தகைய நிலையையே முதலில் காட்டிய, எங்கள் ஆதிபரமாசாரியரது அருள்வாக்கில் காண் கின்றோம்.

அத் திருவெண்பாவில் அவர்கள் தங்கள் ஆன்மார்த்த மூர்த்தியாகிய சொக்கநாதனைப் பலவகையாக அழைக்கின்றார் கள். சொக்கநாதன், விண்ணில் இருக்கும் தேவன் ; அதே சமையத்தில் மண்ணில் உள்ள மதுரை நகரில் எழுந்தருளி யிருக்கும் சிற்பரனுந்தான் என்று அருளுகின்றவர்கள், எல்லா உயிர்கட்கும் தலைவனாயுள்ள அவனது முதன்மையை நினைந்து, 'எவ்வுயிர்க்கும் கோவே' என்று அழைக்கின்றார்கள். 'எவ்

வுயிர்க்கும் கோ' என்றால், தமக்குக் கோ என்பதும் அதில் அமைந்துதானே இருக்கின்றது? இருந்தாலும், "எனை ஆளும் கோவே" என்று தனியாக அவர்கள் கூறுகின்றார்கள்; அது மதுரைப் பெருமான் தமக்குக் கண்ணுக்கினிய பொருளாய்த் தானே அவர்களது கரத்தில் வந்து ஆன்மார்த்த மூர்த்தியாய் அமைந்து அருள்புரிகின்ற சிறப்பை நினைந்து ஆர்வத்தோடும், உரிமையோடும் அழைத்ததாம்.

சொக்கலிங்க மூர்த்தியை இவ்வாறெல்லாம் அழைத்து அவர்கள் அப்பெருமானிடம் என்ன வேண்டுகிறார்கள்? 'என் நா என்றும் உன்னையே துதிக்கவும், என் நெஞ்சு என்றும் உன்னையே நினைக்கவும், என் உடல் என்றும் உன்னையே வணங்கவும் அருள்செய்' என்று வேண்டுகின்றார்கள். 'வணங்க' என்றதனால், 'உடம்பு' என்பது தானே விளங்குகிறது. இறைவனை வணங்குவதைப் பெருமையாகக் கருதுதல் வேண்டும் என்பது, 'கனத்தில்' என்றதனால் தெரிகின்றது.

இறைவனை நாம் மனத்தால் நினைத்து, வாயால் வாழ்த்திக் காயத்தால் வழிபடுதற்பொருட்டே இறைவன் பல திருமேனிகளைக் கொண்டு விளங்குகின்றான். அத் திருமேனிகளை மாலை, ஆபரணம் முதலியவற்றால் அலங்கரித்து வழிபட்டால் இடர் நீங்கும்; அவ்வாறு செய்யாமல், நம் உடம்பை அழகுபடுத்த நினைப்பதால், இடர் மேலும் அதிகரிக்கின்றது என்பதை,

"உன்னைச் சிங்காரித்து உனதுஅழகு பாராமல்
என்னைச் சிங்காரித்து இடர்ப்பட்டேன்"

என்று குறிக்கின்றார்கள். 'எனது அறியாமையால் என் நிலை இவ்வாறு இருப்பினும், நான் செய்த வினைகளை நீக்கி, மீண்டும் பிறப்பில் வாராதபேரின்ப வீட்டை எனக்கு அளித்தல் உனக்குத்தான் கடமை' என்றும், 'ஆதரவு இன்றி, ஆறுதல் இல்லாமல் துயர்ப்பட்ட எளிய வேடனுக்குத் துணைபுரிய நினைத்து, அதே நிலையில் உள்ள அந்தணனால் பழிக்கப்படுதற்கு அஞ்சி உண்மையை விளக்கிய பெருமான் நீயாதல் பற்றியே, ஆறுதலும் ஆதரவும் இல்லாத நான் இவ்வாறு வேண்டிக் கொள்கின்றேன்' என்றும் பின்னர் அவர்கள் அருளிச்செய்யும் வெண்பாக்கள், ஊன்றி உணர்ந்து பயன் கொள்ளத் தக்கன. இத்தகைய அரும்பெருங் கருத்துக்கள் நிறைந்த திருவாக்குக்களை நன்கு ஓதி உணர்தல் பெரும்பயன் தருவதாகும்.

# சிவஞான முனிவரின் : : : : : இலக்கணக் கொள்கைகள்

செஞ்சொற்கொண்டல். வித்துவான்,
திரு. சொ. சிங்காரவேலன் M. A., Dip. Ling.

(மலர் 25, இதழ் 9 பக்கம் 404 இன் தொடர்ச்சி)

## 1. 1. 3. 1 உயிர்மெய் :

உயிரும் மெய்யும் கூடியொலிக்கும் உயிர்மெய் எழுத்துக்கள் சார்பெழுத்துக்களாகக் கணக்கிடப்பட்டுள்ளன ; இதன் இயல்பைத் தொல்காப்பியர் பின்வருஞ் சூத்திரத்தாற் புலப்படுத்துவர் :[1]

"புள்ளியில்லா எல்லா மெய்யும்
உருவுருவாகி யகரமோ டுயிர்த்தலும்,
ஏனை உயிரோடுருவு திரிந்துயிர்த்தலும்
ஆயீரியல உயிர்த்த லாறே"

'உயிர்த்தல்' என்பதற்கு ஒலித்தல் என்று பொருள் கூறுதலைச் சிவஞான முனிவர் மறுப்பர். உயிர் போறலின் உயிர் எனப்பட்டது என்பது அடிகள் கருத்து. "கடவுளால் ஆவி, மெய் என்றமைத்த பெயர்க்காரணம் உயிர்களான் முற்றும் உணர்தற்கு அருமையும், கடவுள் நூல் உணர்ந்தோர் வழிச் செல்லும் தமது பெருமையும் தோன்ற 'விளம்பினர் புலவர்' என்றார். ஆவியும் மெய்யும் போறலின் இவ்விருவகையெழுத்திற்கும் ஆவி மெய் என்பன உவமவாகுபெயராய்க் காரணப் பொதுப்பெயராயின" என்ற வரிகள் அக்கருத்தை விளக்குகின்றன.[2]

ஆதலின் 'உயிர்த்தல்' என்றதன் 'ஒலித்தற்' பொருளை முனிவர் பின்வருமாறு மறுக்கின்றனர் : "உயிர்த்தல் என்பதற்கு ஒலித்தல் எனப் பொருள் உரைத்தார் ; முன்னுருவாகியும்

---

[1] தொல் - நூற்பா - 17.

[2] நன்னூல் விருத்தியுரை - நூற்பா 63 உரை.

உருவுதிரிந்தும் உயிர்த்தல் வரிவடிவிற்கல்லது ஒலிவடிவிற் கன்மையின் ஒலித்தல் என்னும் பொருள் ஏலாமை யறிக,''[1] ஒப்பிலக்கணம் வகுத்த கால்டுவெல் அவர்களும், உயிர், மெய் என்ற குறியீட்டைத் தமிழ் இலக்கணவியலாரின் விழுமிய படைப்பு என்று பாராட்டியுள்ளமை இங்கு நினைக்கத்தக்கது.[2]

## 1. 1. 3. 2 அளபேடை: (lengthning of vowels)

அளபெடை பற்றித் தமிழ் இலக்கண ஆய்வாளர் பெரிதும் சிந்தித்துள்ளனர். தொல்காப்பியரும், நன்னூலாரும் இதுபற்றி எடுத்துரைக்கும் நூற்பாக்கள் பின்வருவன :

" குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும்
நெட்டெழுத்திம்பர் ஒத்த குற்றெழுத்தே''

" ஐ ஒள என்னும் ஆயீரெழுத்திற்கு
இகர வுகரம் இசைநிறை வாகும் ''[3]

" இசைகெடின் மொழிமுதல் இடைகடை நிலைநெடில்
அளபெழும் அவற்றவற் றினக்குறில் குறியே ''

" ஐஔ இஉச் செறிய முதலெழுத்து
இவ்விரண் டோரின மாய்வரன் முறையே ''[4]

'நெடிலது விகாரமாய் ஓரொலியாய்ப் பிறப்பதே அளபெடை' என்பது முனிவர் கருத்து. 'நீரும் நீரும் சேர்ந்தாற்போல நெட்டெழுத்தோடு குற்றெழுத்து ஒத்துநின்று நீண்டிசைப்பதே அளபெடை' என்பர் மேலும்.[4] 'நெடிலும் குறிலும் விரலும் விரலும் சேர நின்றாற்போல் இணைந்து நின்று அளபெடுக்கும்' என்பது பிறர் கருத்து. 'எழுத்து எடை' என்னாது, 'அளபு எடை' என்று குறியிட்டதே அவர் கருத்துப் பொருந்தாதென் பதற்குச் சான்று என்று முனிவர் நிறுவுகின்றனர். அடிகளுடைய இவ்விளக்கம் கற்றோர்க்குக் கழிபேருவகை தருவது ஒன்றாகும்.

இன்னிசை யளபெடை, சொல்லிசை யளபெடை என்றும், இயற்கை யளபெடை, செயற்கை யளபெடை என்றும் பிரித்துப் பொருள்கொள்ளப் பெறுவது அளபெடை. உயிர் அளபெடை

---

[1] இலக்கணவிளக்கச் சூறாவளி - பக். 67 (நாவலர் பதிப்பு)

[2] Caldwell's comparatiue Grammar p. 132-1961.

[3] தொல் - நூற்பாக்கள் - 41, 42

[4] நன்னூல் - நூற்பாக்கள் - 91, 71

[5] தொல்காப்பிய முதற் சூத்திர விருத்தி - பக்- 26 (நாவலர்)

யில், நெடிலையடுத்து வரும் குறில் மாத்திரை நிறைத்தற்கு அன்றி அறிகுறியாகவே வருவதுபோலவே, ஒற்றளபெடையில் ஒற்றையடுத்து வரும் ஒற்றும் அளவை நீட்டும் அறிகுறியாகவே கொள்ளப்படும் என்பது முனிவர் கொள்கை:- "மாத்திரை நிறைத்தற்கன்றி அறிகுறி மாத்திரையாய் வரும் என்று கோடற்கு 'வேறே' என்றார்". - என்று வரும் உரைப்பகுதி அதனைத் தெளிவாக்கும்.[1]

உயிரளபெடை இதனன் உயிரின் வேறாகாது என்றும், ஒற்றளபெடை ஒற்றின் வேறாகாது என்றும் முனிவர் கருதுவர். இதுபற்றியே இவற்றைச் சார்பெழுத்து என்று பிறிது கோடற்கு முனிவர் சற்றும் உடம்பட்டிலர் என்று கருதலாம்.

## 1. 1. 3. 3 குற்றியலுகரம்:

குற்றியலுகரம் புள்ளிபெற்று நிற்றல் வேண்டும் என்பது முனிவர் கருத்தாகும்; நச்சினார்க்கினியர், இளம்பூரணர் கருத்துக்களோடு மாறுபட்டு நிற்கும் இவ்வுரையாசிரியர், குற்றியலுகரம் தமிழ்க்கே உரிய தனிச்சிறப்பு என்று கருது கிறார்,[2]:- "குற்றியலுகரம் தமிழ்ச் சிறப்பெழுத்தாகலின், வட மொழியின் வாராதாயிற்று. இக்குற்றியலிகரக் குற்றியலுகர வுண்மை யறியாத வுரையாசிரியர் "இடைப்படிற் குறுகும் இடனுமாருண்டே" என்பதற்கு இடைப்படினுங் குறுகும் என உம்மையைமாற்றி, இறந்தது தழீஇயிற்றாக்குவர். அஃதாசிரியர் கருத்தொடு முரணும் என்பது இக்கூறியவாற்றானறிக" என்னும் முதற் சூத்திர விருத்தி யுரைப்பகுதி இதனை விளக்குகின்றது.[3] குற்றியலுகரம் தமிழ்க்குரிய அருஞ்சிறப்புக்களுள் ஒன்று என்ற ஆசிரியர் கருத்து சிறப்புடையதாகும்.

காட்டு, கூட்டு என ஆய்குறைந்து நின்ற ஏவல்வினைச் சொற்களின் வரும் உகரம் வினைக்கண் வரும் முற்றுகரம் என்ற நச்சினார்க்கினியர் கருத்தை மறுத்து, நம் முனிவர் 'அவைபோல் வன புணர்ச்சிக்கண் முற்றுகரத்திற்குரிய செய்கை பெறுமையின்[3] அவை குற்றுகரமே எனக் கருதும் இயல்பினர். எனவே வினைக் கண் வரும் உகரம் முற்றுகரம் என்ற கருத்தொடு இவர் மாறு கொள்ளும் இயல்பு தெளிவாகும்.

---

[1] நன்னூல் விருத்தியுரை - நூற்பா - 92

[2] தொல்காப்பிய முதற்சூத்திர விருத்தி பக்கம் 31 (நாவலர்)

[3] ,, ,,

"முப்பாற் புள்ளியும் எழுத்தோரன்ன" எனுந் தொல்காப்பிய நூற்பாத் தொடரை,[1] 'மூன்று புள்ளிபெறும் எழுத்துக்களும் எழுத்தென்னுங் குறியீட்டிற்குரிய' எனப் பொருள்படுமாறு விளக்கிக் காட்டுகின்றனர். இவ்வழக்கு, - குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்ற மூன்றும் புள்ளி பெற்று நிற்பன என்னும் வழக்குப் பிற்காலத்து ஒழிந்து. தனிமெய் ஒன்று மட்டுமே புள்ளி பெற்று நிற்றலாக இன்று உள்ளமை இங்கு நினைக்கத்தக்கது.

'நுந்தை' என்னும் சொல்லின் கண் நகர மெய்யை யூர்ந்த உகரம் குற்றியலுகரமே என்ற தொல்காப்பியர் கருத்து இவ்வாசிரியர்க்கு உடன்பாடு ஆகும். நன்னூலார் இதனைக் கூறுது ஒழிந்தனர். இது மறுத்தல் என்னும் மதம்பற்றி என்பர் சங்கர நமச்சிவாயர். வழிநூல் முதனூலை மறுத்தது' என்ற கருத்து, இம் முனிவர்க்குப் பொருந்தாது ஆகலின், 'மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின் முடியாததனையும் முட்டின்றி முடித்தல்' என்னும் உத்தியான் 'நுந்தை யென்னும்' முறைப் பெயர் மருங்கின் ஒற்றிய நகரமிசை"[2] உகரம் ஊர்ந்து மொழி முதற்கண் நிற்பினும் குற்றியலுகரமாம்' என்று இவ்வாசிரியர் எழுதுவதனைக் காண்கின்றோம்.[3] இது முந்தையோர் கருத்தினை ஏற்புழிக் கொண்டு மேற்சொல்லும் சீர்மை உடையார் இம் முனிவர் என்பதற்குத் தக்க எடுத்துக்காட்டாகும்.

குற்றியலுகர முற்றியலுகர வேறுபாடுகள் இன்று பேச்சுத் தமிழில் முற்றும் வீழ்ந்துவிட்டன என்றே கூறலாம்; ஆயினும் கூர்ந்து நோக்கும்போது, இவ்வேறுபாடு இன்றும் உள்ளது; இதனை மொழியியலார் கண்டு காட்டுகின்றனர். 'காட்பாடி'[6] 'கோட்சேரி' - என்னும் இரண்டு ஊர்ப்பெயர்கள், தமிழகத்தில் இன்று வழங்கி வருகின்றன. 'காட்டுப்பாடி', 'கோட்டுச்சேரி' என்பவையே இவ்வாறு ஒலிக்கப் பெறுதலை உற்று நோக்கினால், குற்றியலுகரம் இருமொழியிடை வருங்காற் பெரிதும் குறுகுதலை அறியலாம்.

"இடைப்படிற் குறுகும் இடனுமா ருண்டே
கடப்பாடறிந்த புணரியலான"[4]

---

[1] தொல்காப்பியம் நூற்பா - 2

[2] தொல்காப்பியம் - நூற்பா - 67

[3] நன்னூல் விருத்தியுரை - நூற்பா - 94

[4] தொல்காப்பியம் - நூற்பா - 37

என்று ஆயிரக்கணக்கான ஆண்டுகட்கு முன் தொல்காப்பியம் காட்டும் விதியைச் செந்தமிழ்மொழி இன்றும் ஓம்பி வருதற்கு இவ்விரு சொற்களும் தக்க எடுத்துக் காட்டுக்களாய் உள்ளன.

## 2, 0, சொல்லியல் (Mordhology)

"திராவிட மொழிகளின் இயல்பை உணர்தற்குப் பெயர்' வினை, தொடர் ஆகிய மூன்றை ஆய்தல் பெரிதும் போதியது" என்று மொழியியற் புலவர் திரு. சூல்சு பிளாக்கு (Jules Bloch) கூறும் கருத்துப்படி[1] நம் முனிவரது கருத்துக்களை இவ்வகையில் சிறிது ஆய்ந்து காணலாம்.

## 2. 1, தன்மை விரவுத்திணையா ?

தன்மையை விரவுத்திணை என்னும் இலக்கண விளக்கம் உடையார் கருத்தை வன்மையாக மறுக்கும் முனிவர், தன்மையை உயர்திணை என உறுதியாக உரைக்கும் இயல்பினர். பேய் பூதம், மந்தி, கிளி, பூவை முதலியன பேசுதலால் தன்மை பொது என்பது இலக்கண விளக்கம் உடையார் காட்டும் காரணம். "பேய், பூதம் முதலியன' 'தெய்வஞ் சுட்டிய பெயர்நிலைக் கிளவி' என்பதனுள் அடங்கும்; மந்தி பேசுதல் யாண்டும் இல்லை; ஒருகாற் கூறப்படுவன புனைந்துரை வகையாற் கூறப்படுவனவே யன்றி உண்மை பற்றிக் கூறியன அல்ல; கிளியும், பூவையும் கூறியவாறு கூறும் இயல்பினவே யன்றி, இச் சொல்லை இவ்வாறு கூறவேண்டும் எனச் சொல்லுண்மை யறிந்து கூறுவன அல்ல: அவ்வாறு கூறப்படுவன உளவாம் ஆயின் அவை புனைந்துரை வகையாற் கூறப்பெற்றனவே" என்ற சில காரணங்களால் முனிவர் மறுத்து எழுதும் பகுதி இலக்கண விளக்கச் சூறாவளி யின் சீரிய பகுதிகளுள் ஒன்று என மதிக்கத்தக்கது ஆகும்.[2] அவ்வாறு மந்தி, எறும்பு முதலியன பேசியதாக வரும் புராண வரலாற்றுக் குறிப்புக்கள், அவை ஒன்றற்கொன்று கருத்தைக் குறிப்பான் உணர்த்தின என்றே கொள்ளப்பட வேண்டுமே யன்றி, மொழியாற் பேசின என்று கொள்ளல் ஆகாது எ தனை முனிவர் இனிது விளக்குகின்றனர்.

---

[1] The grammatical structuse of the Dravidian languages Poona - 1954 - P. 1

[2] இலக்கண விளக்கச் சூறாவளி - பக்சம் 85

இனி, அஃறிணைப் பொருள்கள் மொழியாற் பேசுவன ஓரோ வழி உளவாம் ஆயின், அது தெய்வத்தன்மை முதலிய சிறப்பு வகையான் ஆகும் ஆதலின் அதுபற்றி விரவுத்திணை என்றல் பொருந்தாது என்று மேலும் நுட்பமாக விளக்குகின்றனர். வழுவமைக்கும் பிற நூற்பாக்களும் இவ்வாறு கொள்ளாக்கால் பிழைபட்டுப் போம் என்பது முனிவர் கருத்து.

'தன்மை யான் நான்' என்ற நன்னூற் சூத்திர உரையில் தன்மை முன்னிலைப் பெயர்களை பொதுப் பெயர்களில் சேர்த்தமை பற்றி விளக்குங்கால், தொல்காப்பியர் மரபுப்படிப் பொதுப்பெயர் என்று கூறப்பட்டன என்கின்றார்;[1]

முனிவர் தமக்குத் தெளிவாகிய கருத்தைக் துணிந்துரைக்கும் இயல்பினர் என்பதனை இவ்வுரைப்பகுதி காட்டும்.

## உ. உ. வேற்றுமை உருபுகள்

எழுவாய் உருபு ஏனை யுருபுகளை ஏற்கும் என்ற பொருளில்'

" ஆறன் உருபும் ஏற்கும் அவ் வுருபே "

எனும் நூற்பா[2] வருதலை முனிவர் விளக்குகின்றனர்; ஆறும் வேற்றுமை யுருபு பிற உருபுகளை ஏற்கும் என்று பொருள் கண்டனர் மயிலைநாதர், சங்கரநமச்சிவாயர், இலக்கண விளக்க உரையாசிரியர் ஆகியோர், ஆறு நுட்பமான காரணங்களை இவ்விடத்துக் காட்டி நம் முனிவர் அவ்வுரைகளை மறுத்துத் தம் உரையை நாட்டுகின்றனர். அவ்வுரையே பிறவற்றினும் சிறந்து நிற்கின்றது.

---

[1] நன்னூல் வருத்தியுரை நூற்பா - 285

[2] நன்னூல் விருத்தியுரை நூற்பா - 293



தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களுடன்
சென்னை அரசு கூட்டுறவு மந்திரி
கனம். திரு. நல்லசேனாபதி சர்க்கரை மன்றாடியார் அவர்கள்

## EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Vaithianathaswamy Devasthanam, Vaithiswarankoil.

My wife and I are on a pilgrimage from Ceylon, from Kasi to Kanyakumari being our object of worship. We came from Kasi, Triveni, Kanchi, Tiruvannamalai, holy Thillai to Vaitheeswarankoil and our hearts vibrated with devotion and love when we witnessed the magnificent Karthigai Mandalabishekam, so beautifully and timefully organised by His revered Holiness the Guru Mahasannidanam of Dharmapuram Adhinam and his devoted band of devout workers. The divine Physician and his divine consort Thaiyalnayaky and the ever magnetic Selvan Muthukumaraswamy inspire and exalt the worshippers and all this is made possible by the Tiruarul at work beneath tha manifold acts of the Dharmapuram Adhinam under whose management, the temple has soared to its present heights. Our hearts were gladdened at the sight oi thousands of pious worshippers who have their Dharsan in such orderly and sacrosanct manner. May the efforts of the High Priests and His holiness, the Guru Mahasannidanam blossom a hundred fold to spread the glory of Thayalnayaki Amman and the dynamic God of the Tamils—Lord Sri Murugan.

We shall proclaim the good work of this Adhinam in the management of Saiva Temples to our Saiva brothern in Lanka, so that the managers of Hindu Temples there may follow the great example.

(Sd.) K. Navarathnam,
Secretary,
Sivathondan Society,
Ceylon.

18—6—66.

(Sd.) Ratna Navaratnam,
Education Officer,
Department of Education.

"Tiruvadi"
113, Columbuturai Road,
Jaffna.

# சித்தாந்த விஞவிடை

தருமையாதீனத் தமிழ்ப்புலவர், சித்தாந்தக் கலைமணி,
மகாவித்துவான்.

திரு. சி. அருணைவடிவேலு முதலியார்

( மலர் 25, இதழ் 9, பக்கம் 380 இன் தொடர்ச்சி )

## உயிரின் நிலைவேறுபாடு

மணுக்கன்: வியாபகப் பொருளாகிய ஆன்மாவிற்கு அவ் வியாபகம் சிறிதும் தோன்றுதவாறு செய்தது ஆணவ மலம் எனின், ஆன்மா என்பது ஒன்று உண்டு என்பது எவ்வாறு புலப்படும்?

ஆசிரியர்: உடம்பினிடத்து அறிவு, இச்சை, செயல் என்பன நிகழ்தல் அறியப்படுதலாலும், உடம்பு சடமாதலின் அதற்கு அறிவு முதலியன இல்லை என்பது தெளிவாதலாலும், அவ்வறிவு முதலியவற்றை உடைய உயிர் உண்டென்பது அறியப்படுகின்றது.

மாணுக்கன்; உயிர் அறிவுடையது என்பதன்றி இச்சை செயல்களும் உடையது என்றல் எவ்வாறு?

ஆசிரியர்: இச்சை, செயல் என்பனவும் அறிவினது நிலை வேறுபாடே யன்றி வேறல்ல என்பதை, இறைவனது ஞான சத்தி, இச்சா சத்தி, கிரியா சத்தி என்னும் சத்திகளைப் பற்றிக் கூறியவிடத்திற் சொல்லியதை மறந்துவிட்டனையோ?

மாணுக்கன்: மறக்கவில்லை; இறைவனது ஞானசத்திதான் அத்தகையது; உயிரினது ஞானசத்தி அத்தகையது அன்று போலும் எனக்கருதி வினவினேன். உயிரினது ஞானசத்தியும், அத்தகையதுதான் என்றுல், உயிரும் இறைவனைப்போலவே ஞானசத்தி, இச்சாசத்தி, கிரியாசத்தி என்னும் மூவகைச் சத்திகளையும் உடையதென்பதாகின்றது. அவ்வாருயின், உயிருக்கும், இறைவனுக்கும் வேற்றுமை என்னை? உயிரும் இறைவ ைேடு ஒத்தபொருளே ஆய்விடாதோ?

ஆசிரியர்; ஆகாது; இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள வேறுபாட்டினைப் பலவகையாக முன்பு விளக்கிக் காட்டினேம்;

அவற்றை மறந்து மீள வினவுகின்ருய். அவ்வேறுபா டாவது; 'இறைவன் சூக்குமப் பொருள்; உயிர் தூலப் பொருள்' என்பதே. அதனல், இறைவனது அறிவு இச்சை செயல்கள் சூக்குமமும், உயிரினது அறிவு இச்சை செயல்கள் தூலமுமாம். ஆகவே, உயிரினும் தூலமாகிய ஆணவம், உயிரினது அறிவு இச்சை செயல்களைப் பற்றுமன்றி, இறைவ னது அறிவு இச்சை செயல்களைப் பற்றமாட்டாது. அவ்வாற் ருல் ஆணவமலத்தால் பற்றப்பட்டு வலியிழந்து கிடக்கும் ஆன்மாவினது அறிவு இச்சை செயல்களை இறைவனது அறிவு இச்சை செயல்கள் பெத்த காலத்தில் மாயை கன்மங் களின் வழியாகவும், முத்தி காலத்தில் நேரேயும் செயற்படுத்தி நிற்கும் என்பதும் முன்பே ஒருவாறு கூறினேம். இங்ஙனம் இறைவனது சத்திகள் என்றும் தூயனவேயாய்ச் செயற் படுத்துவனவாயும், ஆன்மாவினது சத்திகள் அனுதியே மாசு படிந்தனவாய், இறைவனது சத்திகள் செயற்படுத்தும் அளவிற் குச் செயற்படுவனவாயும் உள்ளனவாதலின், ஞானசத்தி இச்சா சத்தி, கிரியாசத்திகளை உடைமை மாத்திரையில் ஆன்மாவும் இறைவனேடு ஒரு நிகராதல் எப்படி? அஃது இல்லை யாதலின், 'ஞானத்தின் வேறுபாடே இச்சையும் செயலும்' என்பது எங்கும் ஒருபெற்றியாவதன்றி வேறுபடாமைபற்றி ஐயமின்று,

இனி, ஆன்மா இறைவனேடு ஒரு நிகரான பொருளாகா தாயினும், அறிவுடைப் பொருளாதலின் இறைவனேடு சிறப்பு வகையில் தொடர்பு கொள்ளுதற்குரிய இனப்பொருளாகும். அதுபற்றியே, 'ஆன்மா' என்னும் பெயர் இறைவனுக்கும். உயிருக்கும் உரிய பொதுப்பெயராயிற்று. அப்பெயரைப் பொதுமை நீக்கிக் கூறவேண்டுமாயின், 'பரமான்மா, சீவான்மா' எனக் கூறுதல் வேண்டும். எனினும் வழக்கத்தில், 'ஆன்மா' என்பது, சீவான்மாவாகிய உயிரையே குறிக்கின்றது. உயிர் இறைவனுக்கு இனப்பொருள் எனவே, பாசங்கள் இனமல்லாத பிறபொருள் என்பது, தானே விளங்கும்.

மாணுக்கன் : இவைகளை எல்லாம் இங்ஙனம் இனிது விளக் கினலன்றே விளங்கும்! அதுநிற்க ஆணவ மலத்தால் பற்றப் பட்டு அறிவு இச்சை செயல்களை இழந்து நின்ற உயிர், மீள அவற்றை உடையதாதல் எவ்வாறு?

ஆசிரியர் : ஆணவமலம் உயிரினது அறிவு இச்சை செயல் களைச் செயற்படவொட்டாது தடுத்து நின்றதன்றி, அவற்றை அழித்துவிடவில்லை; அழிப்பதும் இயலாது. ஏனெனில், தோற் றமும் கேடும் அறிவில்லாத பொருளிடத்தன்றி, அறிவுடைய பொருளிடத்து நிகழா. ஆதலின், அறிவு இச்சை செயல்கள்

இறைவனுடையனவாயினும், உயிரினுடையவாயினும் அழிவில்லனவேயாம். ஆகவே, இறைவனுடையனபோலச் சூக்குமமாகாது தூலமாய் நிற்கும் உயிரினது அறிவு இச்சை செயல்களை ஆணவமலம் அழிக்கமாட்டாது தடுத்து நிற்கும் அளவே செய்வதாம். சடப்பொருள்களுள் ஒன்று மற்றொன்றால் இயல்பு கெடுமாகலின், மாயை, கன்மம் என்பவற்றால் ஆணவமலம் உயிரினது ஞானேச்சாக்கிரியைகளைத் தடுத்து நின்ற நிலைமை கெடப்பெறும். அந்நிலைமை கெடவே தடுக்கப்பட்டு நின்ற அறிவு இச்சை செயல்கள் செயற்படத் தொடங்கும். இது, விடம் தலைக்கேற மூர்ச்சித்துக் கிடந்தவன், மணிமந்திர ஔடதங்களால் விடம் இறங்க, அதன்பின்னர் உணர்வுபெற்று எழுதல்போல்வதாகும். உயிரை இந்நிலைக்கு உட்படுத்துதலால், ஆணவ மலத்திற்கு 'மூர்ச்சை' என்று ஒரு பெயர் சொல்லப்படுகின்றது. உயிர் அழிவில்லாத பொருள் ஆதலின், 'விடம் ஏறப் பெற்றவன் இறந்தொழிதலும் உண்டன்றோ' என்னும் தடைக்கு இங்கு இடம் இல்லை.

மாணாக்கன் : நன்றாய்ச் சொன்னீர்கள் ! சூக்குமப்பொருள், தூலப்பொருள் என்பவை பற்றியும், அறிவுடைப்பொருள், அறிவில் பொருள் என்பவைபற்றியும் இங்ஙனம் நுனித்துணர வேண்டுவன பல உள என்பது தெரிகின்றது. அவை அங்ஙனமாக. இறைவனைப்போலச் சூக்குமப் பொருளாகாது தூலப் பொருளாய் இருத்தலின் ஆணவ மலத்தால் பற்றப்பட்ட உயிர் அது காரணமாக, இறைவனைப் போல என்றும் ஒருநிலையினதாகாது பல்வேறு நிலையினதாகுமன்றோ ? அந்நிலைகள் இவை என விளக்கியருளல் வேண்டும்.

ஆசிரியர் : நல்லது ! விளக்குவோம்:

## மூன்றவத்தை

உயிர், 'மாயை, கன்மம்' என்பவற்றோடு கூடாது. ஆணவ மலத்தோடு மட்டும் இருப்பதும், பின்னர் மாயை கன்மங்களோடு கூடி இருப்பதும், பின்னர் மும்மலங்களும் நீங்கப் பெற்று இறைவனோடு இரண்டறக் கலந்து நிற்பதும் ஆகிய மூன்று நிலைகளை உடையது. நிலைகளை, 'அவத்தை' (அவஸ்தை) என வடமொழியிற் கூறுவர்.

## கேவலாவத்தை

உயிர், மாயை கன்மங்களோடு கூடாது ஆணவ மலத்தோடு மட்டும் இருக்கும் நிலை, 'கேவலம்' எனப்படும். 'கேவலம்' என்பதற்கு, 'தனிமை' என்பது பொருள். இந்நிலையில் ஆன்மாவிற்கு அறிவில்லை; இச்சை இல்லை; செயல் இல்லை; உடம்பு

இல்லை; உட்கருவிகளாகிய மனம் முதலியன இல்லை; அதனால், வினைகளை ஈட்டுவது இல்லை; அவற்றின் பயனாகிய இன்பத் துன்பங்களை நுகர்தல் இல்லை; எதுவும் இல்லை; அறியாமையே வடிவமாய்க் கிடக்கும். அதனால் இதை, 'இருள்நிலை' என்று கூறலாம். 'உயிர் என்பது ஒன்று இல்லை' என்று சொல்லாமல், 'உள்ளது' என்று மட்டும் கூற நிற்பதால், இதனை, 'தன் உண்மை' என்றும் கூறுவர்.

## சகலாவத்தை

அறிவு இச்சை செயல் ஒன்றும் இன்றி அறியாமையில்மூழ்கிக் கிடக்கும் இருள்நிலையாகிய கேவலத்தின் கொடுமைமைவதுக் கண்டு இரக்கங்கொண்ட இறைவன். அவ்வறியாமையைத் தந்து நிற்பதாகிய ஆணவ மலத்தைப் போக்குதற்பொருட்டு மாயை. கன்மம் என்னும் இரண்டனையும் கூட்டுவிக்க, அவற்றால் ஆணவ மலம் சிறிதே நீங்கப்பெற்ற உயிர், விண், மண், பாதலம் என்னும் மூவுலகங்களிலும் பிறந்து உழலும் நிலை, 'சகலம்' எனப்படும். சகலம்-கலையோடு கூடுதல். கலை-மாயா காரியம். இந்நிலையில் உயிருக்கு அறிவு உண்டு; இச்சை உண்டு; வினைகளை ஈட்டுதல் உண்டு; எல்லாம் உண்டு என்றாலும் பெரிய பொருளை அறிய மாட்டாது சிறிய பொருள்களையே பெரிய பொருளாக மயங்கி அவற்றை அடைய விரும்பி முயலும் சிற்றறிவும், சிற்றிச்சையும், சிறுதொழிலுமே உடையதாகும்; இந்நிலையை, 'மருள்நிலை' என்று கூறலாம்.

## சுத்தாவத்தை

விண், மண், பாதலம் என்னும் மூவுலகங்களிலும் மாறி மாறிப் பிறந்து, இன்பத்தைப் பெறவும், துன்பத்தைப் போக்கவும் விரும்பி அவற்றிற்குரிய வழிகளை ஆராய்ந்து அறிந்து, அறிந்தவாறே முயன்று, அம்முயற்சியின்வழி எண்ணிய பயன் எண்ணியவாறே கை கூடுமாயின் இன்பத்தையும், கை கூடாதவழித் துன்பத்தையும் நுகர்ந்து, விருப்பு வெறுப்புக்களை அடைந்து நிற்கும் சுழற்சியால் ஆணவமலத்தின் சத்தி மெலிவடையச் சிறுபொருள்களை விரும்பும் நிலைமாறிப் பெரும் பொருளை அடைய விரும்பும் விருப்பம் உண்டாகும். அப்பொழுது இறைவன் குருவாகி வந்து முப்பொருள்களின் இயல்புகளை உள்ளவாறு உணர்த்தி மெய்யுணர்வைத்தர, அவ்வுணர்வின்வழி மும்மலங்களினின்றும் நீங்கி, நின்மலனாகிய இறைவனை அடைந்து இன்புற்றிருக்கும் நிலை கிடைக்கும்; இந்நிலையே சுத்தம் எனப்படும். மாசாகிய மலங்களினின்றும் முற்றிலும் நீங்கி உயிர் தூய்மைபெற்று நிற்பதால் இந்நிலை இப்பெயர் பெற்றது. இதன்கண் உயிர் இறைவனது அருளையே பற்றுக்கோடாகப் பற்றிநிற்றலால், இதனை 'அருள்நிலை' எனலாம்.

(தொடரும்.)

# தையல்நாயகி அந்தாதி

[ மூலமும் உரையும் ]

( மலர் 25, இதழ் 9, பக்கம் 389 இன் தொடர்ச்சி )

எய்தற் கரியவிம் மானிட தேகமெற் கீந்துமதில்
நய்தற் குரிய பிணிபல வைத்தனை நன்மையதோ!
வுய்தற் கினிநெறி யேதாந் தயிலம்மை யுத்தமியே!
செய்தற் கரிய பிழையென்ன செய்தனன் சிந்திப்பையே! 33

(இ-ள்) உத்தமி(ஏ) தயிலம்மை ஏ - மேலான தன்மை யுடையவளாகிய தையல் நாயகித் தாயே! எய்தற்கு அரிய இம் மானிட தேகம் எற்கு ஈந்தும் - கிடைத்தற்கு முடியாத இந்த மக்கள் உடலினை (ஆறறிவுற்றதை) ஏழையேற்குக் கருணையினால் தந்தருளியும் அதில் நைதற்கு உரிய பிணி பல வைத்தனை (அவ்வுடலைக்கொண்டு உயிரானது முன்னேறவொண்ணாதவாறு) அவ்வுடம்பினிடத்து மிகத் துன்பினை யடைவதற்கான பல்வகை நோய்களை வைத்துவிட்டனையே; நன்மையது ஓ - ஈது நன்மையுடைத்தாகுமோ; (இச் செயல் நன்று அன்று) உய்தற்கு இனி நெறி ஏது ஆம் - கடைத்தேறற்கு இனிமேல் ஏது மார்க்கமாகும். செய்தற்கு அரிய பிழை என்ன செய்தனன் - எவருஞ் செய்யாத கொடிய குற்றங்கள் எவற்றினைச் செய்தனன். சிந்திப்பை ஏ - திருவுள்ளத்திடைக் கருதிப் பார்த்தருளுவீராக. எ - று.

(கு - ரை) நைதல் - வருந்தல். உய்தல் - பிழைத்தல். நெறி - உபாயம். பிழை - தவறு (குற்றம்). சிந்தித்தல் - எண்ணுதல். பிணி - (பிணித்தல்). கட்டும் நோய். ஓகாரம் - எதிர்மறை. ஏகாரம் - அசைநிலை

சிந்திப் பதுன்புகழ் ஏத்துவ துன்கழல் செய்வதுதான்
அந்திப் பகலுமுன் செந்தாட் டிருப்பணி யம்பிகையே!
சந்தித் தெளியனை யஞ்சலஞ் சேலென்று சாற்றிமிகும்
புந்தித் திருக்கறுத் தாடைய னுயகப் பொன்னனையே. 34

(இ-ள்) தையல் நாயகம் பொன் அன்னை ஏ - தையல் நாயகமாகிய அழகிய தாயானவளே. சிந்திப்பது உன் புகழ் - தேவரீருடைய திருப்புகழினையே தியானம் பண்ணுலும். ஏத்துவது உன் கழல் - திருவடிகளையே தோத்திரம் புரிவதும். அந்திப்

பகலும் உன் செம்தாள் திருப்பணி செய்வது - காலையிலும் மாலையிலும் பகற்போதிலும் தங்களுடைய செவந்த திருவடித் தொண்டு பூண்டொழுகலும், (இயற்றுவன்) ஆயவற்றினைச் சலிப்பின்றிச் செய்திடுவன் எளியனைச் சந்தித்து அஞ்சல் அஞ்சேல் என்று சாற்றி - அடியேனிடத்துக் கருணைகாட்டித் தரிசனந்தந்து பயப்படாதே பயப்படாதே என்று திருவாய் மலர்ந்தருளி, புந்தி மிகும் திருக்கு அறுத்து ஆள் (வாய்). அடியவன்றன் புந்தியாகிய மனத்திடத்து மிகுந்த மயக்கமெனும் மாறுபாட்டினைப் போக்கி யாண்டருளுவீராக. எ - று.

(கு - ரை) அந்தி - முடிவுடையது. காலையந்தியும் மாலையந்தியுமாம். அஞ்சேல் அஞ்சேல் என்பது அடுக்குத்தொடர். அஞ்சல் அஞ்சேல் எனவாயது. அஞ்சல் எதிர்மறைப் பொருட்டு. திருக்கு - மாறுபாடு. (அன்னை) அனை - இடைக் குறை, ஏ - அசைநிலை.

பொன்னு லகெண்ண நிறைவுறப் போந்து புகறுதிகண்
மன்னும் வயித்திய நாதன் றகுநின்று வையகத்தார்க்கு
என்றும் வரமளிப் பாயெனி லேழைக் குதவு கில்லாய் !
பன்னும் பனுவல்கொண் டாடைய ளுயகப் பைங்கொடியே. 35

(இ - ள்) தையல் நாயகம் பைம் கொடி ஏ - பசிய கொடி போன்ற துவளுகின்ற இடையினை யுடைய தையல்நாயகியாரே! நீர், பொன் உலகு எண்ணம் நிறைவு உற போந்து - சுவர்க்க லோக வாசிகளாகிய தேவர்தம் எண்ணங்களெல்லாம் பரிபூரணமாக நிறைவுறும்படி எழுந்தருளிவந்து. புகல் துதிகள் மன்னும வயித்தியநாதன் தளி நின்று - கூறப்பட்ட தோத்திரங்கள், நிலைபெறும் வைத்தீசுவரன் கோயிலின்கண் அருள்புரிதற்கு தெற்குமுகமாக நிலைபெற்று. வையகத்தார்க்கு - மண்ணுலகத்தவர்க்கு. உன்னும் வரம் - (மண்ணுலகத்தவர்க்கும்) அவர்கள் கருதிய வரங்களை. அளிப்பாய் - கொடுத்தருளுவாய். என்னில் - என்றால். ஏழைக்கு உதவுகில்லாய் - அறிவிற் சிறியவனாகிய தமியனுக்கு மாத்திரம் அருள்புரிகின்றிலீர்; இல்லை. பன்னும் பனுவல் கொண்டு ஆள் - அடியவன் கதறிக் கூறும் செய்யுட்களை யேற்றருளிக் கொண்டு ஆண்டருளுவீராக. எ - று.

(கு - ரை) உன்னல் - கருதல். மன்னும் - நிலைபெறும். வரம் - மேலான நிலை. பனுவல் ஆகுபெயராய் நூலுக்காயிற்று. பன்னும் - கூறும். தளி - கோயில். பைங்கொடி - பசுமைகொடி. (பசிய பூவினையுடைய அழகிய கொடி போன்றவள்). (அன் மொழித்தொகை).

கோடியிடை யாரடைந் தார்தவ ரன்பர்கள் கூறிவர்க்குப்
படியில னந்தத் தவறிழைத் தேபகல் பாழில்விட்ட
கோடியவ னுயினு மேதைய னுயகி கோகனக
வடியடைந் தேனின் னடைக்கலங் காத்தரு ளம்மணியே. 36

(இ - ள்) கொடி இடையார் அடைந்தார் தவர் அன்பர்கள் கூறு இவர்க்கு - கொடிபோன்ற இடையினை யுடைய மகளிரும், பற்றுக்கோடாக (தஞ்சமாக) வந்தடைந்தவரும், தவவொழுக்க முடையவரும், சிவனடியவர்களும் என்று கூறப்பட்ட இவர்கட்கு, படியில் அனந்தம் தவறு இழைத்து - இப் பூமியின்கண் முக் கரணங்களாலும் பலபடியான குற்றங்களைச் செய்து, பகல் பாழில் விட்ட கொடியவன் ஆயினும் - பல நாட்களைப் பாழ்படுத் திய சண்டாளத்தன்மையினை யுடையவனுக இருந்தாலும், தையல்நாயகி - பாலாம்பிகையே! அம்மணியே - அழகிய அன்னையே! கோகனகம் அடியடைந்தேன் - தாமரை மலர் போலும் திருவடிகளைச் சார்ந்தேன். நின் அடைக்கலம் - தேவரீ ருடைய தஞ்சமாவேன். காத்தருள் - மீண்டும் பிறவிக் கடலில் வீழ்ந்து துன்புறுவாறு காத்தருள் புரிவீராக. எ - று.

(கு - ரை) படி - பூமி. அனந்தம் - முடிவிலது. பகல் - நாள். கோகனகம் - தாமரை. பாழ் - பயனற்றது.

அம்பலத் தாடி யரியம் புலியுரி யார்கடுக்கை(ச்)
செம்புனல் சூடும் பரம னிடத்தொளிர் தேவியுனை
நம்பிய நுதினம் பேருந் திருவரு ணச்சிநின் றேன்
அம்புவி வான்புக ழுந்தைய னுயக வாரணங்கே. 37

(இ - ள்) அம்பலத்து ஆடி - பொன்னம்பலத்திடத்து ஐந்தொழில் ஆடல் புரிபவனும், அரி அம்புலி உரி ஆர் கடுக்கை. செம்புனல் - சிங்கம் புலியாகிய இவற்றின் தோலினையும் ஆத்திப் பூ, கொன்றைப்பூ ஆயவற்றினையும், கங்கையினையும். சூடும் பரமன் இடத்து ஒளிர் - இவற்றினை யணிந்த பரமேசுவரனுகிய வைத்தியநாதப் பெருமான் பக்கலில் (இடப் பாகத்தில்) விளங் கா நின்ற. தேவி - பாலாம்பிகையே. உன்னை நம்பி அநுதினம் - தேவரீரையே உறுதியாக எண்ணி நாள்தோறும். பேறு ஆம் திருவருள் நச்சிநின்றேன் - பெரும் பேருகிய திருவருட் பாங் கினையே விரும்பிப் போற்றுகின்றேன். அம்புவி வான்புகழும் - மண்ணவரும் விண்ணவரும் போற்றிப்புகழும். தையல் நாயகம் ஆரணங்கே - பாலாம்பிகையாகிய தெய்வமே. எ - று.

(கு - ரை) அரி - சிங்கம். உரி - தோல். கடுக்கை - முதலாகு பெயராய்க் கொன்றைப்பூவினை யுணர்த்திற்று. சூடல் - தரித்தல். செம்புனல் - முழுகினர் பாவம் போக்கிச் செம்மையுறச் செய்த லின் செம்புனல் எனக் கங்கைக்கு ஆயிற்று. இது கங்கைக்கு இயற்கை. அம்புவி வானம் - இடவாகு பெயராய் அங்குள்ள மனிதரையும் தேவரையும் உணர்த்திற்று.

ஆராயும் பூஞ்சர ணண்டர் முனிவர ரம்புவியோர்
சீரா யுரைத்தசொல் லோவள வில்லை சிறுமதியேன்
நாரா யுரைத்திடு புன்சொல் லையுங்கொடு நல்லவருள்
தாரா யரிவிழி யாய்தைய லுயகத் தண்ணமுதே. 38

(இ - ள்) அரிவிழியாய்! தையல்நாயகம் தண் அமுது ஏ - செவ்வரி கருவரி பரந்த கண்களை யுடையவளே! பாலாம் பிகையாகிய குளிர்ச்சி பொருந்திய தேவாமிருதமே! அண்டர் முனிவரர் அம்புவியோர் - தேவர்களும் இருடிகளும் மண்ணுலகத் தவரும். ஆராயும் பூசரண் - வேதங்களால் ஆராயப் பெற்ற அழகிய திருவடிகளைப்பற்றி. சீர் ஆய் உரைத்த சொல் ஓ அளவு இல்லை - சிறப்புப் பொருந்தச் செய்யப்பெற்ற சொன் மாலைகளோ எனில் அளவு இலவாகும். சிறுமதியேன் - புல்லறி வினேன். நார் ஆய் உரைத்திடு புல் சொல்லையும் கொடு - அன்புகொண்டு கூறும் இழிவான (தாழ்வான) சொற்களையும் ஏற்றுக்கொண்டு. நல்ல அருள் தாராய் - நல்ல திருவருளினைத் தந்து அருளுக. எ - று.

(கு - ரை) நார் – அன்பு. அமிர்து அமுது எனவாயிற் றென்றோ, அமிழ்து அமுது எனவாயிற்றென்றோ கொள்ளல் கூடும். அண்டர் - இவர்கள் காமியத்தாற் செய்த நல்வினைப் பயனால் சுவர்க்க வுலக வின்பங்களைத் துய்ப்பவர். சீர் - புகழ். புன்மை – இழிவு. கொண்டு என்பது கொடு என வந்தது. தாராய் – தருவாய். (வேண்டற் பொருட்டு).

(தொடரும்)

---

உனக்குப் பணிசெய்ய உன்றனையெந் நாளும்
நினைக்க வரமெனக்கு நீதா — மனக்கவலை
நீக்குகின்ற தென்மதுரை நின்மலனே எவ்வுலகும்
ஆக்குகின்ற சொக்கநா தா,

— ஸ்ரீ குருஞானசம்பந்தர்.

திருச்சி - மலைக்கோட்டை ஸ்ரீ தாயுமானேசுவரர் திருக்கோயில்
மகாகும்பாபிஷேகம் (29—8—'66)



தருமையாதீனம்
ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்

மகாகும்பாபிஷேகக் காட்சி



தருமையாதீனம்
ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானத்தை
அறங்காவலர் திரு. மேனேன் வரவேற்றல்



மலை தரிசனத்துக்கு
ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் எழுந்தருளிய
மின் வண்டி

## ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள்

வழங்கியருளிய

# ஆசியுரை

**25—8—'66**

திருச்சிற்றம்பலம்

வாயானை மனத்தானை மனத்துள் நின்ற
கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் றன்னைத்
தூயானைத் தூவெள்ளை ஏற்றான் றன்னைச்
சுடர்த்திங்கட் சடையானைத் தொடர்ந்து நின்றேன்
தாயானைத் தவமாய தன்மை யானைத்
தலையாய தேவாதி தேவர்க் கென்றும்
சேயானைத் தென்கூடல் திருஆலவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.

திருச்சிற்றம்பலம்

ஆலம் தரித்தலிங்கம் ஆலவாய்ச் சொக்கலிங்கம்
மூலமாய் எங்கும் முளைத்தலிங்கம்—பாலொளியாம்
மத்தனே கூடல் மதுரா புரிஉமையாள்
அத்தனே ஆலவா யா.

மெய்யன்பர்களே !

இன்றைய நாள் சைவப் பெருமக்கட்குச் சிறந்ததொரு நன்னாள்; பொன்னாள். இறைவன் அமரர்க்கு அரியவன்; அடியவர்க்கு எளியவன். அமரர் விண்ணுலகத்தார்; அடியவர் மண்ணுலகத்தார். அதனால் அமரர்களும் இறைவன் திருவருளைப் பெறுதற்கு மண்ணுலகில் அடியார்களாய்ப் பிறக்க விரும்புவர்.

புவனியிற் போய்ப்பிற வாமையின் நாள்நாம்
போக்குகின் றேம்அவ மேஇந்தப் பூமி
சிவன்உய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கித்
திருப்பெருந் துறையுறை வாய்திரு மாலாம்

அவன்விருப் பெய்தவும் மலரவன் ஆசைப்
படவும்நின் அலர்ந்தமெய்க் கருணையும் நீயும்
அவனியிற் புகுந்தெமை ஆட்கொள்ள வல்லாய்!
ஆரமு தேபள்ளி எழுந்தரு ளாயே.

என்று தோத்திரமும்,

"வானிடத் தவரும் மண்மேல் வந்தரன் றனைஅர்ச் சிப்பர்"

என்று சாத்திரமும் கூறுகின்றன.

அடியார்க்கு எளியவனாக இறைவன் கொண்ட வடிவங்களில் முதலாவது இலிங்கத் திருமேனி. அத்திருமேனியுடன் அவன் எண்ணிறந்த தலங்களில் எழுந்தருளியிருந்து, அடியார்கட்கு அருள் வழங்குகின்றான். மதுரையம்பதியில் எழுந்தருளியிருக்கும் சொக்கலிங்கம், எல்லா இலிங்கங்கட்கும் மூலலிங்கம் எனத் திருவிளையாடற் புராணங் கூறுதல் காணலாம். ஆலவாய்ச் சொக்கலிங்கத்தையே அப்பர் பெருமான்,

"முளைத்தானை எல்லார்க்கும் முன்னே தோன்றி"

என்று அருளிச் செய்தார்.

"மூலமாய் எங்கும் முளைத்த லிங்கம்"

என்று எங்கள் ஆதி பரமாசாரியர் அருளிய சொக்கலிங்கமூர்த்தி எழுந்தருளிய மதுரையம்பதியில்தான் இறைவன் அடியார்க்கு எளியவனாய் வந்து செய்த அருட்டிரு விளையாடல்கள் பல நிகழ்ந்திருக்கின்றன.

இறைவன் சிதம்பரத்தில் பொன்னம்பலத்திலிருந்து பெற்றான் சாம்பானாகிய அடியவன் பொருட்டு உமாபதி சிவாசாரியாராகிய அடியாருக்குத் திருமுகம் விடுத்தருளினான்; மதுரையில் வெள்ளியம்பலத்திலிருந்து பாணபத்திரராகிய அடியவர் பொருட்டுச் சேரமான்பெருமாள் நாயனாராகிய அரசர்க்குத் திருமுகம் விடுத்தருளினான். அடியார்க்கு எழுதிய திருமுகத்தில் தன்னை, 'அடியார்க்கு எளியவன்' எனக் குறித்தருளினான்; அரசர்க்கு விடுத்த திருமுகத்தில் தன்னை, 'சந்திரன் தவழ்கின்ற மதில்களையும், மாடமாளிகைகளையும் உடைய மதுரையம்பதியில், அன்னங்கள் நிறைந்த தடாகங்களையுடைய சோலை சூழ்ந்த ஆலவாய்த் திருக்கோயிலில் அகலாது வீற்றிருக்கின்ற சிவபிரான்' எனக் குறித்தருளினான்.

விறகு விற்றது, பன்றிக்குட்டிகட்குத் தாய்ப் பன்றியாய்ச் சென்று பால் கொடுத்தது முதலியன போல இறைவனது எளிமையை மிகுதியாக எடுத்துக் காட்டுவனவாக மதுரையிற்செய்த திருவிளையாடல்களில், மண் சுமந்த திருவிளையாடல் மிகவும் அருமையும், பெருமையும் வாய்ந்ததாகும். ஏனெனில், இத் திருவிளையாடலில் இறைவன், செம்மனச் செல்வியாகிய வந்தியினது அன்பிற்காக மண்சுமந்ததோடு நில்லாமல் பாண்டியனால் பிரம்படி பட்டுத் தனது பொன் மேனியில் புண் சுமந்தும் நின்றான். இவ்வருமையை மாணிக்கவாசகர் பெரிதும் நினைந்து பாடுகின்றார்.

''பண்சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்
பெண்சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்
விண்சுமந்த கீர்த்தி வியன்மண் டலத்தீசன்
கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை
மண்சுமந்து கூலிகொண்டு அக்கோவால் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய்''

என்பது அவ்வருமைத் திருப்பாட்டு

''வைகைக்கோ புனற்கங்கை வானதிக்கோ சொரிந்துகரை
செய்கைக்கென் றறியேமால் திருமுடிமண் சுமந்ததே''

''அரும்பிட்டுப் பச்சிலையிட் டாட்செய்யும் அன்னையவள்
தரும்பிட்டுப் பிட்டுண்டாய் தலையன்பிற் கட்டுண்டே''

என்று குமரகுருபரரும் கூறுகின்றார்.

இறைவன் குதிரையைக் கொண்டு குடநாடதன்மிசைச் சதுர்படச் சாத்தாய்த் தானெழுந்தருளிய திருநாள் ஆவணிமூல நாளேயாதலின், அதனையடுத்து அவன் மண் சுமந்தருளிய திருநாளும்அந்நாளோடு,தொடர்புடையதாகின்றது. இறைவன் மாணிக்கவாசகர் பொருட்டுக் குதிரை வாணிகனாகிக் குதிரை கொணர்ந்த திருவிளையாடலும், அடியவர் பொருட்டு அவன் தன்பெருமை தானறியாது பெரிதும் எளியனாந் தன்மையனான பேரருட் டிறமே என்பதைப் பரஞ்சோதியார் பின் வருமாறு விளக்குகின்றார்.

'குதிரை வாணிகனாய் வந்த இறைவனுக்குப் பாண்டியன் நல்லதோர் ஆடையைப் பரிசாக அளிக்க, அதை அவன் தான் ஏறியிருந்த குதிரையினின்றும் இறங்கிச் சென்று கையேற்று முடியில் அணிந்துகொண்டான். அனைத்துலகிற்கும் முதல்வ

ளுகிய இறைவன் இவ்வாறு ஓர் அரசனிடம் பணிவு காட்டி, அவன் கொடுத்த ஆடையை ஏற்று முடியில் அணிந்து கொள்ளு தல் பொருந்துமோ எனின், அடியவர் ஒருவர்க்காக விறகு தலையனாய் வந்து, நான் அவரது அடிமை என்று சொல்லிய அவன் இதைச் செய்யக் கூசுவானோ? தன் அடியாரைக் காத்தற் பொருட்டு அவன் இதனைச் செய்தான்;

" வாசிவா ணிகர்க்குத் தென்னன் வண்துகில் வரிசை யாக
வீசினுன் பாணர்க் கேவல் செய்தவர் வெள்கு வாரோ
கூசிலா நேசர்க் காப்பான் குதிரையின் இழிந்தேற் றந்தத்
தூசினை இரண்டாங் கங்கை எனமுடி சூடி நின்றார்."

என்னும் அவரது பாடலைக் காண்க.

எத்துணையும் அரியனாகிய இறைவன், இங்ஙனம் எத்துணை யும் எளியனாய் வந்த பேரருட்டிறத்தை நினைப்பிக்கும் சிறந்த திருநாள் இவ் ஆவணிமூலத் திருநாள். தானேவந் தெம்மைத் தலையளித்தாட் கொண்டருளும் சொக்கலிங்கப்பெருமான் எங்கள் ஆதி பரமாசாரியராகிய ஸ்ரீ குருஞான சம்பந்தரது திருக்கரத்தி லும் பொற்றாமரைத் தீர்த்தத்திலிருந்து தானேவந்து அமர்ந்து ஆட்கொண்டருளினன்.

பொற்றாமரைத் தீர்த்தத்தில் மூழ்கியபொழுது தம் கரத்தில் சொக்கலிங்கமூர்த்தி கிடைத்ததைக் கண்ட குருஞானசம்பந்தர் மெய்ம்மறந்த பேரன்பினால்,

" கண்ணுக் கினிய பொருளாகி யேஎன் கரத்தில்வந்தாய்!
விண்ணும் பரவிடும் அற்புத மேயென்ன விஞ்சையிதான்
மண்ணும் புகழ்ந்திட என்னையும் பூரண வாரியுள்ளே
நண்ணும் படிசெய் மதுரா புரிச்சொக்க நாயகனே "

என்று பாடித் துதித்து மகிழ்ந்தார். பின்பு குருவாணையின்படி இத் தருமையை அடைந்து ஞானசாரியராய் ஞான பீடத்தில் வீற்றிருந்த அவர் பூஜித்து வந்த சொக்கலிங்கப் பெருமான் என்றும் எழுந்தருளியிருப்பது இத் திருமடம் ஆதலின், அப் பெருமானது அரிய அருட்டிருவிளையாடல் நாளாகிய ஆவணி மூலத் திருநாள் இத் திருமடத்திற்குச் சிறந்ததொரு நன்னாளாய் விளங்குகின்றது.

ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமான் அருள் ஞான மூர்த்திமட்டு மல்லன்; தமிழ்ச் சங்கத் தலைவன்; நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி நற்கனகக் கிழி தருமிக்கு அருளினேன். ஆதலின், அவ்னது திருவருள் இவ் ஆவணி மூல விழாவில் ஆண்டு தோறும்

சிவநெறிப் பற்றுடைய செந்தமிழ்ப் புலவர்கள், சித்தாந்த வல்லுநர்கள், சிவபுண்ணியச் சீலர்கள் முதலியவர்களை அழைத்துப் பட்டம் அளித்துப் பாராட்டிச் சிறப்பிக்கின்றது. இவ்வாண்டில் அத் திருவருளுக்கு உரியவராய் இங்கு வந்திருப்பவர், காஞ்சிபுரம் திரு. க. வச்சிரவேல் முதலியார் B. A., L. T. அவர்கள்.

திரு. முதலியாரவர்கள், சிறந்த சைவப் பற்றும், சித்தாந்த நூல்வன்மையும் உடையவர். தாம் ஆழ்ந்து நுணுகிக் கற்ற பொருள்களை அனைவரும் எளிதின் உணருமாறு எடுத்துரைக்கும் நாநலம் உடையவர்; இனிய பண்பினர். இவை எல்லாவற்றினும் மேலாகச் சிவபூஜா துரந்தரராய் விளங்குபவர்; இளமை முதலே நமது திருமடத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டு, 'தருமையாதீனத் தமிழ்ப் புலவர்' என்னும் பட்டமும் பெற்றிருப்பவர். சென்னையில் உள்ள நமது சமயப் பிரசார நிலையத்தில் சித்தாந்த நூல்களைப் பாடமுறையில் வாரத்திற்கு ஒருமுறையாக நீண்ட நாட்கள் நடத்திப் பலருக்குச் சாத்திர ஞானத்தை உண்டாக்கியவர். நம் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்தின் ஆதரவில் காசிப் பல்கலைக் கழகத்தில் ஆற்றிய இவரது சைவசித்தாந்தச் சொற்பொழிவுகள் நூல் வடிவிலும் வெளிவந்துள்ளன. இவரது கல்விச் சிறப்பை அறிந்த இலங்கைத் தமிழ் மக்கள் இலங்கைக்கு இவரை வருவித்துச் சைவமும் தமிழும் பற்றிப் பல சொற்பொழிவு ஆற்றச் செய்து கேட்டு மகிழ்ந்தனர். இவற்றால் இவரது சைவத் தொண்டும், தமிழ்த் தொண்டும் காசி முதல் இலங்கை வரையிலும் நிகழ்ந்து பலர்க்கும் பயன் தந்துள்ளமை புலப்படும்.

உலகியலில் ஆசிரியத் தொழிலில் ஈடுபட்டு, அதில் தலைமையும் பெற்று விளங்கிய இவர், அத் துறையிலும் சிறக்கப் பணியாற்றி இந்திய ஜனாதிபதி அவர்களால் வழங்கப்பெற்ற பரிசினையும் பெற்றார். இத்தகைய நம் அன்பரவர்களை நம் செந்தமிழ்ச் சொக்கன் திருவருள், தம் அலுவலினின்றும் ஓய்வு பெற்ற இவ்வாண்டிலே திருமுன் வருவித்து, சித்தாந்தக் கலைச் செல்வராக்கிச் சிறப்பிக்கின்றது.

அறுபதாண்டு நிறைவெய்தி அன்பும், பண்பும் உடையவராய்த் திகழும் நம் சித்தாந்தக் கலைச் செல்வர். திரு. க. வச்சிரவேல் முதலியார் அவர்கள், நீடிய வாழ்நாளும், நல்லுடலும், மற்றும் எல்லா நலங்களும் பெற்று, சைவத்திற்கும், தமிழுக்கும் அருந்தொண்டுகள் பல ஆற்றி நீடுவாழச் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

"சித்தாந்தக் கலைச் செல்வர்" என்ற பட்டம் பெற்ற திரு. க. வச்சிரவேல் முதலியார், அவர்கள் நிகழ்த்திய சிறப்புச் சொற்பொழிவு.

பேராசிரியன்மார்களே. மற்றும் பெருமக்களே, திருநின்ற செம்மையைப் பெறும் வாய்ப்புள்ள மாணாக்கர்களே, ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் பொன்னார்ந்த திருவடிகளைத் தொழுது, அவர்தம் பேரருளைச் சிந்தித்து என் சொற்பொழிவை ஆற்றப்புகுகின்றேன்.

## நன்றியறிவே நல்லறத்தின் உயிர் :

செய்ந்நன்றியறிதலே எல்லா அறங்களுக்கும் அடிப்படை. அதனை என்போல்வார் எண்ணிக் கடைப்பிடித்தற் பொருட்டுப் பெரியோர்களால் வைக்கப்பெற்றதே இவ்வாவணிமூலத் திருநாள். இத் திருநாளில் சொக்கலிங்கமூர்த்தியின் கீர்த்தியை மணிவாசகர் வாய்மொழியும் வரலாறுங் கொண்டு உணர்கின்றோம். அம்மூர்த்தி நம் ஆதீனத்தின் ஆன்மார்த்த மூர்த்தியாகவும் பரார்த்த மூர்த்தியாகவும் விளங்குபவர்; ஆதிபரமாசாரிய மூர்த்திகளால் பூசிக்கப்பெற்று, பூதபரம்பரை பொலிய, பிரதிட்டிக்கப் பெற்றவர். அவர்தாம் நமது குருமகாசந்நிதானமாகவும், ஆதீனத் தாபனங்கள் வடிவிலும் பின்நின்று நமக்கு இம்மை மறுமைகளுக்கு உறுதி பயக்கும் உணர்வையும் பழக்க வழக்கங்களையும் ஏனை நலன்களையும் வழங்கி அருள்புரிகின்றார் என்னும் நினைவை நம் உள்ளத்தில் கிளர்ந்தெழச் செய்வோமாக! அவர் செய்துவரும் உபகாரத்தை என்றும் மறவா வரத்தை அவர்தம் திருவடியை எண்ணி வேண்டுவோமாக.

என்னைப் பொறுத்தவரை, ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் ஆசியுரையில் முதற்கண் அமைத்துள்ள சொக்கநாத வெண்பாவை என் இயல்பிற்கு ஏற்பப் பொருள்செய்து எண்ணுகிறேன். "அன்றுமுதல் இன்றளவும் மேலும் அடியேனுக்கு - என்றும் நீ நன்மை செய்வதன்றி நான் - ஒன்றேனும், செய்யுமாறு எங்ஙன்? சிவனே! இனி நாயேன் - உய்யுமாறு எங்ஙன்? உரை!" என்பது எனக்கு மிகப்பொருந்தியதொரு பாட்டாக வாய்த்துள்ளது. 25 ஆண்டுகளுக்கு முன், 1941ல், இங்கு நடைபெற்ற திருமுறை சாத்திர மாநாட்டில்தான் எனக்கும் இவ்வாதீனத்திற்கும் தொடர்பு ஏற்பட்டது. அன்றுமுதல் இன்றளவும் இவ்வாதீனத்தால் வளர்ச்சியும் உயர்ச்சியும் நன்மையும், முயற்சி பெரிதும் இன்றிப், பெற்றுள்ளேன் என்பதை எடுத்

துரைக்கும் கடப்பாடு உடையேன்; இனி. சொக்கலிங்கப் பெருமான் திருவருள் சைவசித்தாந்த நெறியை ஓர் அளவு விளக்கஞ்செய்யும் திருப்பணியில் அடியேனை உய்த்தருளும் எனக் கருதுகின்றேன்.

## கல்விச்செம்பொன்வரை :

சிவபிரான், பரை, ஆதி, இச்சை, ஞானம், கிரியை என்னும் ஐந்து சத்திகளால் உயிர்களுக்கு உபசரித்துவருதல் போல, நமது கயிலைக் குருமணி அவர்கள் பல்கலைக் கல்லூரி முதலாகத் தொடக்கப்பள்ளி வரை ஐந்துவகையான கல்வித்தாபனங்களை நிறுவிச் சீர்பெற நடாத்தி நல்லருள்புரிகின்றார்கள். இன்று அவற்றின் ஆண்டு நிறைவிழா. ஆதலால் கல்வியின் சிறப்பை மாணிக்கவாசகர் மறைமொழிகொண்டு சிந்திப்போமாக !

கற்றுணர்ந்த தலைமகன் திருமணமானபின், தான் உணர்ந்த உறுதிகள் மேலும் உறுதிகள் உள்ளனவோ என உணர்தற் பொருட்டும். தான் உணர்ந்ததைப் பிறர்க்குப் பயன்பட வைத் தற்பொருட்டும் தலைவியைப் பிரிந்து பிற நாட்டிற்குச் செல்லத் துணிகின்றான்; அப்பிரிவைத் தலைமகளுக்கு உணர்த்தும் குறிப்போடு தோழியிடம் கல்வி நலங் கூறுகின்றான் :

"சீர் அளவில்லாத் திகழ்தரு கல்விச் செம்பொன்வரையின்
ஆர் அளவில்லா அளவுசென்றார் அம்பலத்துள் நின்ற
ஓர் அளவில்லா ஒருவன் இருங்கழல் உன்னினர்போல்
ஏர் அளவில்லா அளவினர் ஆகுவர் ஏந்திழையே."

என்பது அவன் கூறியது.

கல்வியினால் வரும் நன்மைக்கு எல்லை இல்லை; அதனால் 'சீர் அளவில்லாக் கல்வி" என்றான். கல்வி ஒருவர்க்குப் பிறரினும் முனைந்து தோன்றும் விளக்கத்தைத் தருவது; அதனால் 'திகழ்தரு கல்வி' என்றான். அக்கல்வி தூய்மையும், பெருமையும், துளங்காமையும், முடிவுகாண இயலாமையும் உடையது. அதனால், அதனைப் பொன்மயமான மாமேரு மலையாக உருவகித்து, 'கல்விச்செம்பொன் மால்வரை' என்றான். இக்காலத்து எவரெஸ்டு குன்றின் உச்சியை எட்டல் உறுவார் போலத், துணிவுணர்வோடுதான் கற்ற அளவின்மேலும் கற்கவேண்டும் என்னும் கருத்துத் தலைமகனுக்கு உள்ளது; அதனால், "கல்விச் செம்பொன் வரையின் ஆர் அளவில்லா அளவுசென்றார்" என்றான். அங்ஙனம் தூயபெரிய கலங்காத கல்வியைக் கற்றதன்மேலும்

கற்பவர் பெறும் நன்மைக்கு அளவில்லை என்னுங் கருத்தினனாய், "கல்விச் செம்பொன் வரையின் ஆர் அளவில்லா அளவு சென்றோர் ஏர் அளவில்லா அளவினர் ஆகுவர்" என்றான். ஏர் - எழுச்சி, உயர்வு, நன்மை.

இனி, யாரைப்போல எல்லையில்லாத நன்மையை எய்துவர் என விளக்கவேண்டி, "அம்பலத்துள் நின்ற ஒருவன் இருங் கழல் உன்னினர்போல் ஏர் அளவில்லா அளவினர் ஆகுவர்" என்றான். சிவபெருமானது வெற்றியை உடைய பெரிய திருவடியை அறிந்து நினைப்பவர் அளவில்லாத நன்மையை அடைவர் என்பது வெளிப்படை; அதனால், அவர் எல்லை யில்லாத நன்மையை எய்துமாறுபோலக் கற்றோரும் நன்மை எய்துவர் என்றான். சிவபிரான் தில்லைத் திருச்சிற்றம்பலத்தின் கண் நின்று பிறவி வழக்கை அறுப்பவர்; அதனால் 'அம்பலத்துள் நின்ற ஒருவன்'; என்றான், ஒருவன்-ஒப்பற்றவன். நீதிபதிகள் வழக்கைக் கேட்கும்போது இருந்து கேட்பர்; முடிவு கூறும் போது நின்றே கூறுவர். முதல்வரும் பிறவி வழக்கை அறுத்து இன்புறு நிலையை நின்று கூறுகின்றான். சிவபோகம் எனப் படும் பரானந்த அனுபவத்தின் இயல்பை அபிராயத்தால் ஐயந் திரிபு இன்றி விளங்கும்படி போதிக்கும் திருவுருவே கூத்தப் பிரான் திருவுரு. அதனால் அத்திருவுருவிற் காணும் நடனம் "பரானந்த போத நடனம்" எனப்படும். சேக்கிழார் அடிகளும் "போதநீயாநிற்கும் தில்லைப் பொதுநடம்" என்றமை ஆழ்ந்து சிந்தித்தற்கு உரியது. முதல்வன் திருவம்பலத்துள் யாவருங் காணத் துணையுடன் நின்றவனே ஆயினும், அவன்றன் உண்மையியல்பு காட்சி, அனுமானம் முதலிய அளவை (பிரமாணங்)களால் அறியவாராதது என்பான், "அம்பலத்துள் நின்ற, ஓர் அளவில்லா ஒருவன்" என்றான். ஓர் அளவு இல்லா- ஓர் அளவையாலும் அறியப்படாத.

ஒருவன் என்ற சொல்லை முழுமுதற் கடவுளாகிய சிவபிரானையே குறிக்கும்படி வழங்குதல் உபநிடதமரபு. வேதத்தில் பரம்பொருளைக் குறித்தற்பொருட்டு ஆளப்படும் சொற்கள் சில உள்ளன. அவை ஓம், தத், சத்து, ஏகம், ஏகன் என்பவை. முதற்பொருள் தன்வயம் உடையதாய் உயிர்களைத் தொழிற் படுத்தி நிற்றலால் உயிர்கள் செய்யும் செயலும் முதல்வன் செயலே ஆகும்; இங்ஙனம் "எவ்வெவர் தன்மையும் தன்வயிற் படுத்துத் தானே ஆகிய தயாபரன்" ஆகிய சிவபிரான் எல்லாந் தானாக நிற்றல்பற்றிச் சுவேதாசுவதரம் என்னும் உபநிடதம் அவனைக் குறித்து, "எவன் இவ்வனைத்தையும் தன் ஆளுஞ்

சத்திகளால் ஆளுகின்றனே அவ்வுருத்திரன் ஒருவனே; அவன் இரண்டாமவனாக நிற்பான் அல்லன். ஏ மக்களே! அவன் னும் அறிவினுள் மறைந்து நிற்கின்றான்'' எனக் கூறுகின்றது. சிவபிரான் திருக்கோயிற் கருவறையின் முன் நிற்கும் வாயில் காவலர் (துவாரபாலகர்) ஒரு கையில் சுட்டுவிரலை நிமிர்த்தி ஒன்றே என்பதுபடக்காட்டி, மற்றைய கை விரல்களைப் பின் மடக்கி இரண்டாவது இல்லை எனக் குறித்து, சிவபிரான் தமக்குப்பின் உள்ளே இருத்தலைக் குறிப்பால் உணர்த்துதல், இச்சுவேதாசுவதர மந்திரத்தின் உருவகமாதல் அறியத்தக்கது. ''ஏகம் சத்; விப்ராபஹுதா வதந்தி'' என்னும், 'இருக்கு வேத மந்திரம்' முழுமுதலின் ஒவ்வோர் ஆற்றல் வகையை (சத்தி பேதத்தை) இந்திரன் என்றும், வருணன் என்றும்... இவ்வாறு கூறிவந்தனர்; செம்பொருளாகிய முழுமுதல் ஒன்றே' எனக் கூறிற்று. அம்முழு முதலின் திருவுருவும், திருப்பெயரும் யாவை என உணர்த்த வந்ததே மேற்காட்டிய சுவேதாசுவதர மந்திரம். இதனால் மகாருத்திரராகிய சிவபிரானைச் சத்தாகிய முழுமுதல் என அறிவித்தல் வேத, வேதாந்த முனிவர்களுடைய துணிபு என்பது விளங்கும்.

மணிவாசகப்பெருமான் இம்முடிபை ''ஒருவன் என்னும் ஒருவன் காண்க! விரிபொழில் முழுதாய் விரிந்தோன் காண்க!'' என்னும் தொடர்களால் திருவண்டப்பகுதியில் உணர்த்தியருள்வார் ஆயினர். இது வைதிகர் அனைவராலும் மறுக்க முடியாத முடிவு என்பது திருமாலை வழிபடு தெய்வமாகக் கொண்டிருந்த நம்மாழ்வார் கண்ணபிரானைப் பாராட்டி மகிழும் இடத்தில், ஒளிமணி வண்ணன் என்கோ! ஒருவன் என்றேத்த நின்ற — நளிர்மதிச்சடையன் என்கோ!...... கண்ணனை மாயனையே'' என இம்முடிபைக் கூறுதல் பற்றித் துணியப்படும். இங்ஙனமே, திருமுறைகளும் சங்கச் செய்யுட்களும் சிவபிரானை முழுமுதற் கடவுள் என்னும் கருத்தால் ஒருவன் என்னும் சொல்லாற் குறித்து வருதல் உணர்ந்தின்புறுதற்குரியது. ஒருவன் என்பது எல்லாம் தானாக நிற்பவன் எனப் பொருள்படும்.

கல்வியின் விழுப்பமும் அதனை மேன்மேலும் கற்பாரது அருமையும் உணர்த்துதற் பொருட்டுத் திருவாதவூர் முனிவரர், 'கல்விச் செம்பொன்வரையின் ஆர் அளவில்லா அளவு சென்றாரை, அம்பலத்துள் நின்ற ஓரளவில்லா ஒருவன் இருங்கழல் உன்னினர்போல் எனச் சிவானுபவச் செல்வர்களோடு ஒப்பித்துக் கூறியருள்வார் ஆயினர்.

மாணிக்கவாசகர் திருவுள்ளத்துக் கல்வி எனக்கருத நின்றது சிவனடியே சிந்திக்கும் திருவைப் பெருக்கும் உவமையிலாக் கலை ஞானமே ஆதலால், அதனால் விளையும் பயன் இம்மை மறுமைத் துயர்நீக்கிச் சுத்தபோகமும் எல்லைமருவா நெறி எனப்படும் முதல்வன் திருவடிப் பேரின்பமுமே ஆம் எனக் கொள்ளப்படும். இங்குள்ள மாணாக்கர்கள் அனைவரும் அத்தகைய கல்வியும் பயனும் பெறும்படி ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் சொக்கலிங்க மூர்த்தியின் திருவருளை வழங்கியருள் புரிக!

**யாவர்க்கும் ஊதியம் :**

மணிவாசகப் பெருமான் தமிழ்மகனது குறிநிலையை (The ideal manwood of a Iamilian)த் திருச்சிற்றம்பலக் கோவையாரின் இறுதிப்பாட்டில் குறித்தருளுகின்றார்.

“ கார்அணி கற்பகம் கற்றவர் நற்றுணை பாணர் ஒக்கல்
சீரணி சிந்தா மணிஅணி தில்லைச் சிவனடிக்குத்
தார்அணி கொன்றையன் தக்கோர்தம் சங்க நிதிவிதிசேர்
ஊருணி உற்றவர்க்(கு) ஊரன்மற் றியாவர்க்கும் ஊதியமே’’

என்பது அப்பாட்டு.

ஒரு தலைமகன் இயற்றமிழும் இசைத்தமிழும் வல்லனாய் உடன் உறைவார்க்கு உசாத்துணையாய் இனியனாய் இருத்தல் வேண்டும்; சிவபெருமான் திருவடிக்கு அன்பனாய், உற்றார்க்கு ஊருணிபோன்றும் தக்கார்க்குச் சங்கநிதி போன்றும் அவர் வேண்டியவற்றைத் தாமே பெறும்படி உரிமை வழங்குவோனாயும் இருத்தல் வேண்டும். பிறர்க்கு மழைபோல வேண்டாதிருப்ப ஈதலும், கற்பகம் போல வேண்டியது ஈதலும், சிந்தாமணி போல முன்னியது முடித்தலும் உடையனும், அரசர் முதலாய யாவர்க்கும் நன்மையை விளைக்கும் ஊதியமாய் வாழ்தல் வேண்டும் என்பது பாட்டின் தொகைப்பொருள். விதி போல்வான் என்றமையின் நட்டார்க்கும் பகைவர்க்கும் குறித்தது முடித்தே தீரும் ஆற்றலும் கூறப்பட்டது.

எட்டாந்திருமுறை திருவாசகம், திருச்சிற்றம்பலக்கோவையார் என இரு பகுதியை உடையது. ஒன்று புறத்திணைபற்றி முழுமுதலைப் புகழ்ந்து பாராட்டுவது, மற்றையது அகத்திணை பற்றி உலகியற்பொருளும் ஞானயோக நுண்பொருளும் நுதலி முதல்வன் திருவடிக்கண் சாத்தப்பெற்றது. திருவாசகம் மர்த்ருசாக்கரங்களைப் போல 51 பகுதிகளை உடையதாய், 656 பாடல்

களை உடையது; திருக்கோவையார் என்னும் திருவளர்தாமரை 400 இதழ்களை உடையது. திருவாசகத்தின் தொடக்கம் "நமச்சிவாய வாஅழ்க!" என்பது; திருக்கோவையாரின் முடிபு "யாவர்க்கும் ஊதியமே" என்பது. முதலையும் முடிவையும் கூட்டி, எட்டாந் திருமுறைக்குப் பெயர்கூறின் "நமச்சிவாய யாவர்க்கும் ஊதியமே" என ஆகும். இங்ஙனம் முதலும் முடிவும் கூட்டிப் பெயரிடுதலை வடநூலார் பிரத்தியாகரித்தல் என்பர். மாணிக்கவாசகர் திருவாய் மலர்ந்த எட்டாந் திருமுறையின் பிரத்தியாகாரப் பெயரை, "நமச்சிவாய யாவர்க்கும் ஊதியமே" என்பதை நாம் சிந்தித்து உய்வோமாக. "ஞான மெய்ந்நெறிதான் யார்க்கும் நமச்சிவாயச் சொலாம்" என்பதே திருஞானசம்பந்தர் நமக்கு இறுதியாக அருளிச்செய்த திருப்பதிகத்தின் கருத்தும் ஆம். "நமச்சிவாயவே ஞானமும் கல்வியும்" என்பது அப்பர் அருண்மொழி.

காலத்தின் அருமைகருதி. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களுடைய திருவடிகளை வாழ்த்தி நன்றிமறவா உணர்வுடன் இந்த அளவில் என் சொற்பொழிவை முடித்துக்கொள்கின்றேன். வணக்கம்.



# ‘அமுதிற்குத் தமிழென்று பேர்’

**வித்துவான். திருமதி. ப. நீலா**

(மலர் 25, இதழ் 9, பக்கம் 392 இன் தொடர்ச்சி)

**நுண்ணுணர்வு :**

நுண்ணுணர்வு என்பது உயிரினங்கள் அனைத்திற்கும் உண்டு. நம்மால் உணரமுடியாத இவ்வுணர்வைப் புலமை படைத்தோர் எளிதில் புரிந்துகொண்டு நமக்கும் உணர்த்து கிருர்கள். புலவர் பெருந்தகைகளுக்கு மட்டும் இது எப்படி சாத்தியமாகிறது? பார்க்கின்ற பொருளாக அவர்களும் மாறி விடுகிருர்கள். ஆகவே அவற்றின் உணர்ச்சிமயமான கோலங் களை அவர்களால் அனுமானிக்க முடிகிறது என்பதுதான் மேற் கண்ட விஞவிற்கு விடையாக முடியும்.

தம்முடைய உணர்ச்சிகளை அஃறிணைப் பொருள்களில் ஏற்றி அவைகளையுங்கூட உணர்வு பெற்றனவாகக் கவிஞர்களால் காட்டமுடியும். எடுத்துக்காட்டுக்கள் சிலவற்ருல் இதன் உண்மை தெளிவோம்.

தலைவன் ஒருவன் நெடுநாட்கள் பிரிந்திருந்த தன் தலைவி யைக் காண குதிரைகள் பூட்டிய மணிகள் கட்டிய அழகிய தேரில் வருகின்ருன். வருகின்ற வழியிடங்களில் எல்லாம் புதுமலர்கள் மலர்ந்து மணம் வீசுகின்றன. மலர்களில் உள்ள தேனைச் சுவைத்துக்கொண்டு வண்டினங்கள் பாடியும், கூடியும் பொழுது போக்குகின்றன. தேரின் மணியொலிகேட்ட வண்டினங்கள் அலமந்து துணைகளைப் பிரிந்து கலங்குகின்றன. பிரிவினல் வரும் துன்பத்தை முற்ற உணர்ந்த தலைமகன் - தன் வருகை காரணமாக கலங்கிப் பிரியும் வண்டுகளின் நிலையை எண்ணிப் பார்த்து உடனே தன் பாகனிடம் தேரிலே கட்டியுள்ள மணி களின் நாக்குகளை இழுத்துக் கட்டச்சொல்லி உத்திரவிடுகிருன். தன் உணர்வையே பார்க்கின்ற பொருள்களும் பிரதிபலிப்பதாக எண்ணுகின்ற தலைவனின் அருள் உள்ளப் பாங்கினை நாம் இங்கே காண்கின்ருேம் அல்லவா!

குறுங்குடி மருதனர் அகநானூற்றில் வரையும் அற்புதக் காட்சி இது.

" பூத்த பொங்கர் துணையொடு வதிந்த
தாதுண் பறவை பேதுறல் அஞ்சி
மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரான் " (அகநா - 4.)

தொல்புகழமுதாம் கம்பர் காப்பியத்தில் ஒரு காட்சி. அறத்தின் வடிவாம், அருமருந்தன்ன திருக்குமரன் இராமனுக்கு முடி சூட்டுவது என்ற எண்ணத்தைக் கைகேகியிடம் தெரிவிக்க வரும்போதுகூட தசரதன் அவள் தன்னுள்ளே அடக்கிவைத்திருக்கும் விஷத்தை ( விஷயத்தை ) வெளிப்படுத்துவாள் என்று எண்ணவில்லை. என் மகன் பரதன் அரசாள - இராமன் வனமாள வேண்டும் என்ற சொல்லரவம் செவியைத் தீண்டிய போதுதான் ஓமத் தீயின் முன்னர் பெண்ணையல்ல தான் மணந்தது - பேயை மணமுடித்தோம் என்று தசரதன் மயங்கினன். இதமான வார்த்தை பல சொல்லியும் கேளாத கைகேயிபால் கொண்ட அளவற்ற காதல் அத்துணையும் நஞ்சென ஆயிற்று தசரதனுக்கு. அந்த வெறுப்பினலும் - தன் மகன் இராமன்பால் கொண்ட மிகுந்த நேசத்தினலும் கைகேகியின் கழுத்தின் நாண் அவள் மகனுக்கு காப்பின் நாண் ஆகட்டும் என்று கூறி மயங்கி விழுந்தான். இரவிலே நடந்த இத்துணை நிகழ்ச்சிகளையும் அறியாது ஆனந்த நினைவுடன் துயிலும் நகர மாந்தரை கோழி கூவி எழுப்புகிறது. விடிந்துவிட்டது. பகலவன் பவனி வரத் தொடங்கிவிட்டான் என்பதை அறிவுறுத்தும் கோழியின் இயல்பான செய்கையில் எண்ணமுடியாத துன்பநினைவுகளைப் புகுத்தி அது அஞ்சி அலமந்து அலறி கைகளால் வயிற்றிலே அடித்துக் கொண்டு அவலங்கொண்டு அழுகுரலோடு மக்களை எழுப்புகின்றது என்ற கம்பரின் கூற்று நாம் மேலே எண்ணிய முடிபுக்கு அரண் செய்கின்றது.

" எண்தருங் கடைசென்ற யாமம் இயம்புகின்றன ஏழையால்
வண்டு தங்கிய தொங்கல் மார்பன் மயங்கி விம்மிய வாறெலாம்
கண்டு நெஞ்சு கலங்கி அம்சிறையான காமர் துணைக்கரங்
கொண்டு தம்வயி றெற்றி யெற்றி விளிப்ப போன்றன கோழியே"

இதனைக்காட்டிலும் 'இராமன் தன் உணர்வோடு பங்கு பெறுவதாக மயிலினங்களை விளிக்கும் மிக உயர்ந்த காட்சி கிட்கிந்தா காண்டத்தில் வருகின்றது.

" ஓடாநின்ற களி மயிலே
சாயற்கு ஒதுங்கி உள் அழிந்து
கூடாதாரில் திரிகின்ற
நீயும் ஆகம் குளிர்ந்தாயோ

தேடா நின்ற என் உயிரைத்
தெரியக் கண்டாய்! சிந்தைஉவந்து
ஆடா நின்ருய் ஆயிரங் கண்
உடையாய்க்கு ஒளிக்கு மாறுஉண்டோ!''

சீதையின் சாயலுக்குத் தோற்று இதுவரை பகைவர் மறைந்து திரிவதுபோல, மயிலே! நீயும் திரிந்துகொண்டிருந்தாய். இப்பொழுது என் உயிரனைய சீதை என்னைப் பிரிந்து சென்றுவிட்டாள் என்பதை அறிந்து நீ மனங்குளிர்ந்தனையோ! என்ஞல் தேடப்படுபவளாய சீதையை நீ எங்கோ பார்த்திருக்கிருய். அதனல்தான் மிகுந்த மகிழ்ச்சியோடு தோகை விரித்து ஆடுகின்ருய்; உண்மைதான். ஆயிரங் கண்கள் கொண்ட உனக்குத் தெரியாமல் சீதையை எங்கே ஒளித்துவைக்க முடியும்?

இராமனது பிரிவு அறிந்த உள்ளம் இப்படிப் பேசுவதாகக் கம்பர் காட்டுகிருர். மிகுந்த துன்பம் அல்லது மகிழ்ச்சி ஒருவனுக்கு வரும்போது அவன் - தன்னல் பார்க்கப்படுகின்ற பொருள்களும் அவ்வுணர்வுகளையே கொண்டிருப்பனவாகப் பாவித்தல் இயற்கைதானே!

கவிஞர் இயல்பாக உள்ள பொருள்களிலும், நடக்கும் சில நிகழ்ச்சிகளிலும் தம் கருத்தைச் சூழலுக்கேற்ப ஏற்றிச் சொல்லுதலும் இலக்கிய மரபாம். ஒளியின் முன் இருள், குளிரின் முன் கோடை, புண்ணியத்தின் முன் பாவம், நன்மையின் முன் தீமை, நட்பின் முன் பகை இவை யாவும் நில்லாவாம். இலக்கிய ஆசிரியர்கள் இவற்றை இடமறிந்து பெய்துள்ள திறம் நினைவு கூரத்தக்கது.

எயினனூர் தந்த ஏந்தல் ஏனதிநாதருக்கு முன் தீவினையாளனும் அதிசூரன் நிற்கலாற்ருது ஓடினன் என்பதனை,

'' நிலைப்பட்ட மெய்யுணர்வு நேர்பட்ட போதில்
அலைப்பட்ட ஆர்வமுதல் குற்றம்போ லாயினர் ''

என்று வருணிப்பார் சேக்கிழார் பெருமான். கவிச்சக்ரவர்த்தி கம்பரும் கதிரவன் எழ இருள் விலகியது என்பதனை,

'' பொங்கி முற்றிய வுணர்வு புணர்தலும் புகையினெடு
பங்கமுற் றனையவினை பரிவுறும் படி முடிவில் ''

(கிட்கிந் - பம்பை - 41.)

வெங்கதிர்க் கடவுளெழக் கங்குலிற்றது என்பார்.

பிறிதொரு காட்சி - திருக்குற்றாலமலையில் அருவி வான்முகடு தொடுத்து இம்மென்ற இசையோடு இழிந்து வருகிறது. அருகிலே நெருங்கமுடியாமல் சாரலடிக்கின்றது. உடல் புகுந்து உளம் புகுந்து உதறலெடுக்கும் குளிர். கோடை என்னும் கொடுமையாளனுக்கு இந்தக் குளிர் சிறிதும் பொறுக்கவில்லை. இங்கு யாரால் இருக்கமுடியும் என்று குற்றாலத்தைவிட்டே ஓடிவிட்டானும்.

"காமாரி திரிகூட வரைச் சாரற் கடுங்குளிரால்
நாமாரிங் கிருக்கவென நடுங்கோடுங் கொடுங்கோடை
தேமாறி புயல்பொழியுந் திங்கடொறு மும்மாரி
பூமாரி தருமருவிப் பொன்மாரி தருமருவி."

(திருக்குற்றாலத் தல புராணம் - நாட்டு - 24.)

குளிருக்கு முன் நில்லாக் கோடையை - குளிர் கண்டு நடுங்கி ஓடியதாகக் கூறும் அழகு திரிகூடராசப்பக் கவிராயருக்குச் சொந்தமாகிறது.

தமிழன்னையின் திருவடிகளை அழகு செய்யும் சிலம்பென்ற சிலப்பதிகாரத்தில், கண்ணகியின் துயர் கண்ட வையை என்ற பெண் பூவாடையால் தன் கண்ணீரை மறைத்துக் கொண்டு செல்கிருள் - என்ருர் இளங்கோவடிகள்.

"உலகு புரந்தூட்டும் உயர்பேரொழுக்கத்துப்
புலவர் நாவில் பொருந்திய பூங்கொடி
வையை என்ற பொய்யாக் குலக்கொடி
தையற் குறுவது தானறிந் தனள்போல்
புண்ணிய நறுமல ராடை போர்த்துக்
கண்ணிறை நெடுநீர் கரந்தனள் அடக்கி."

(புறஞ்சேரி - 168 - 173)

புனல்யாறு அல்ல இது பூம்புனல் ஆறு என்னும்படி ஓடுவதாகக் கூறுகிருர்.

கவுந்தியடிகளால் அறிமுகம் செய்யப்பெற்ற மாதரியின் இல்லத்தில் கணவனுக்கு அமுது படைக்கிருள் கண்ணகி. மண் மகள் - கண்ணகியின் அன்புச் செயலைப் பார்த்து - இதுதான் இவள் கடைசி முறையாக இடும் உணவு - என்ற உண்மை உணர்ந்து மயங்கினுள். அலையிடைப் பிறவா அமுதனைய கண்ணகி தண்ணீர் தெளித்து அவள் மயக்கத்தை ஒழிப்பவள்

போல் நிலத்தை நீர்விட்டு மெழுகி இலையிடுகிருள். இளங்கோ வடிகளின் பரிந்த உள்ளம் இப்படி எல்லாம் பாடுகின்றது.

"மண்ணக மடந்தைதன் மயக்கு ஒழிப்பனள்போல்
தண்ணீர் தெளித்து தன்கையால் நீவிக்
குமரி வாழைக் குருத்தகம் விரித்"தாள்.

(கொலைக்கள - 40 - 42.)

கட்டுரை காதையில் பாண்டியனின் செங்கோல் அறம் பேசப் படுகிறது. முன்ஞெருசமயம் ஆராயாமல் வார்த்திகன் என்னும் அந்தணனைச் சிறைசெய்ய, பின்பு அது தவறு என்று தெரிந்த போது பாண்டியன் வார்த்திகனின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி மன்னிப்புக் கேட்கிருன். அடிகளின் சொல்லாட்சி - அங்கே மன்னன் பணிந்தான் என்ற செயலை,

"இரு நில மடந்தைக்குத் திருமார்பு நல்கியவள்
தணியா வேட்கையையும் சிறிது தணித்தனனே"

என்பதாக அமைகிறது.

பரஞ்சோதி முனிவரும் இந்த உத்தியிலே மனம் பறிகொடுத் தவராய் - வந்தியின் ஆளாய் வந்த சிவபெருமான் வேலையே துஞ் செய்யாராய்த் துயில்கின்றமையை,

"தருமேவு மலைமகளுஞ் சலமகளும் அறியாமல்
திருமேனி முழுதுநில மகள்தீண்டித் திளைப்பெய்தக்
குருமேவு மதிமுடியைக் கூடையணை மேற்கிடத்தி
வருமேரு வனையார்தம் வடிவுணர்ந்து துயில்கின்ருர்."

(திருவிளை - மண்சுமந்த - 28.)

இனி, சேக்கிழார் பெருமான் எண்ணி அனுபவித்த ஓர் நுண்ணுணர்வுக் காட்சி யொன்று கண்டு அமைவோம். 'ஆளும் நாயகன் கயிலையில் இருக்கை கண்டல்லால் மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்' - என்ற சொற்குறுதி படைத்த அப்பர் பெருமான் தில்லையின் எல்லையிலே வந்துகொண்டிருக் கிருர். இந்தப் பண்பாளருக்கா சமண் குண்டர்கள் அத்துணைத் தீங்கு செய்தார்கள் என்று அயலிலே விளைந்துள்ள கரும்புகள் முத்துக்கள் என்ற கண்ணீர்த் துளிகளைச் சிதறி அழுகின்றன வாம்.

"..................வளர் இக்குப்
பெருகிப் புடைமுதிர் தரளஞ் சொரிவன
பெரியோ ரவர்திரு வடிவைக் கண்டு
உருகிப் பரிவுறு புனல்கண் பொழிவன
எனமுன்புள வளவய லெங்கும்"

(பெரிய - திருநா - 158.)

சோலைகளிலே குயில்கள் இவர் வருகையைப் பார்த்து பிறவிப் பகை நெறிவிடுவீர்! இருவினை பெருகித் தொடர் பிணியுறு பாசம் பறிவுற்றிட அணையுமின் என்று கூவ, தமிழ் இறையோராம் இவரது திருவடிவம் கண்டதே அதிசயமென்று அரகர என்றே சிவமுன் பயில் மொழி பகர்கின்றதாம் சிறைமென் கிளியொரு வளர்பூவை.

இவற்ருல் நுண் உணர்வு அனைத்திற்கும் உண்டு என்ருலும் புலமை உள்ளமே அதனைப் புரிந்து காட்டும் கண்ணடி என்பதில் எட்டுணையேனும் ஐயமுண்டோ? இல்லை! இல்லை!

(விரியும்)

---

## விசேஷ நாட்கள்

### 10—9—'66 முதல் 10—10—'66 முடிய

| | |
|---|---|
| 12—9—66 | பிரதோஷம் |
| 13—9—66 | கிருஷ்ணங்காரசதுர்த்தசி |
| 13—9—66 | இளையான்குடிமாற நாயனர் திருநக்ஷத்திரம் |
| 15—9—66 | மறைஞானசம்பந்தர் திருநக்ஷத்திரம் |
| 18—9—66 | விநாயகர் சதுர்த்தி |
| 24—9—66 | ஏனதி நாயனர் திருநக்ஷத்திரம் |
| 26—9—66 | பிரதோஷம் |
| 27—9—66 | நரசிங்கமுனையரைய நாயனர் திருநக்ஷத்திரம் |
| 28—9—66 | நடராஜர் அபிஷேகம் |
| 1-10—66 | உருத்திரபசுபதி |
| 3-10—66 | திருநாளைப்போவார் நாயனர் திருநக்ஷத்திரம் |
| 4-10—66 | வேளூர்க் கிருத்திகை |

## வேலூர் தேவஸ்தானம் ( வைத்தீசுவரன்கோயில் )

# இலவச சித்த வைத்தியசாலை,

## வேம்பு கல்பம்

வேம்பு ஸ்ரீ வைத்திய நாதசுவாமி கோயில் ஸ்தல விருட்சம். அதன் ஒவ்வொரு பாகமும் வைத்தியத்திற்கென்றே கடவுளால் உண்டாக்கப்பட்ட ஒரு அற்புத மூலிகை. ஆதலின் இது தெய்வீகத் தன்மை வாய்ந்த மூலிகையாகக் கருதப்படுகிறது. கண்ணுக்குப் புலப்படாத மிக நுண்ணிய பூச்சிக்களையும் கொல்லக்கூடிய சக்திவாய்ந்ததால் இதை எந்த விசேஷத்திற்கும் நம் வீடுகளில் பயன்படுத்துகிறோம்.

இவற்றுள் 1. கருவேம்பு, 2 கறிவேம்பு, 3. சிவனார் வேம்பு, 4. நிலவேம்பு, 5. மலைவேம்பு என ஐந்துவகை உண்டு. இவற்றுள் நாம் அதிகமாக உபயோகிப்பது கறி வேம்பு (கருவேப்பிலை). வேம்பு ஆங்கில வைத்தியத்தில்கூட இதன் பட்டையைக் கியாழமாகச் செய்து குளிர்சுரம், முறைசுரம், பித்தவாதசுரம் முதலிய சுரத்திற்கு உபயோகித்திருக்கிறார்கள். சுரத்திற்குப் பின் ஏற்படும் பலகீனம், அக்கினிமாந்தம் இவை களுக்கு இதன் பட்டை, கொஞ்சம் கிராம்பு, கருவாப்பட்டை சேர்த்து கஷாயம் செய்து கொடுத்து வந்தால் நல்ல பலத்தை யும் பசி தீபன சக்தியையும் கொடுக்கும்.

இதன் இலையை ஆருத புண்ணுக்கும் கிருமியை நாசம் செய்வ தற்கும் உபயோகிக்கிறார்கள். அதாவது எந்த புண்ணுக்கும் வேப்பிலையை மஞ்சள் சேர்த்து அறைத்துக் கொதிக்கவைத்து புண்ணில் வைத்துக் கட்டினால் ஆருத புண்ணும் ஆறிவிடும். இதன் வித்து விஷத்தையும் சந்நிவாதத்தையும் போக்கும். இதன் நெய் குழந்தைகளுக்கு உண்டாகும் இசிவு, கணை, கரப்பான், கிரந்தி, சந்நி, சிரங்கு, சுரம், பித்தவாதம் இவை களைப் போக்கும். வேப்பிலைச் சுண்டாங்கி அந்தரவாய்வு, குடல் உப்புசவாயு, கரப்பான், கிருமி சூலை, சேட்டுமம், தாபம்' தினவு, வாய்வு விப்புருதியும் போம்.

இது நீர் வியாதிக்கு ஓர் அற்புத மருந்து. அதாவது பொதிகைமலைச் சாரலில் மிகுதியாகக் கிடைக்கும் "சர்க்கரைக்

கொல்லி'' என வாகடத்தில் வழங்கும் ''சிறுகுகுஞ்சான்'' இலையுடன் நூறு வருடம் சென்ற வேப்பங்கொழுந்தையும், ஆவாரை இலையையும், பட்டையையும், வில்வ இலையையும், கருந்துளசி, வேர்ப்பட்டையையும் நிழலில் உலர்த்தி தனித்தனி சூரணித்து சம பாகமாகச் சேர்த்து காலையில் பசுமோரிலும், மாலையில் வெந்நீரிலும் கலந்து சாப்பிட்டுவந்தால் மூத்திரக்காய் (Kidny) மூத்திரப்பை (Blader) இவைகளில் ஏற்படக்கூடிய வியாதியைப் போக்கவல்லது. நல்ல பலத்தையும் சரீர காந்தியையும் அளிக்கும் பஞ்சபூத மூலிகை நிவாரணியாகும். அனுபோகத்தில் ஏக மூலிகைகளை உபயோகிப்பதைக் காட்டிலும் கூட்டு மூலிகைகள் தான் நல்ல பலனைத் தருகின்றன.

மேற்குறிப்பிட்ட மூலிகைக் கற்பத்துடன் கோமேதக சிலா சத்தும் நற்பவழமும் சேர்ந்த பற்பம் வைத்துச் சாப்பிட்டு வந்தால் மேகம் 21ம் நிவர்த்தியாகும்.

**கல்ப்ப முறை :**

வமன விரேசன முறைகளால் சரீர சுத்திசெய்துகொண்டு இஷ்டதெய்வ பூஜை செய்தபின் முன் முறைப்படி தயாரித்த சூரணம் 1-பங்கும், திரிபலை சூரணம் 1-பங்கும், சுத்திசெய்த குக்குலு ½-பங்கும், சுத்திசெய்த கெந்தகம் 1/16 பங்கும், சேர்த்து காலை மாலை சிற்றாமணக்கெண்ணெயில் குழைத்துச் சாப்பிட வேண்டும். இவ்வாறு ஒருமண்டலம் சாப்பிட்டுவந்தால் 18 வித குஷ்டங்கள், பிரமேகம், குன்மம், காசம், சுவாசகாசம், க்ஷயம், சுரம், வாத வியாதிகள் நீங்கும். தேகத்தில் தேஜஸ் பெருகும். ஆறுமாதம் சாப்பிட்டால் இளமை திரும்பும், ஒருவருடம் உபயோகித்தால் சித்திபெறலாம். அப்போது அவனது மல மூத்திரங்களின் ஸ்பரிசத்தால் தாம்பரம் தங்கமாகும்.

இம்மாதம் இவ் வைத்தியசாலையில் சிகிச்சைபெற்ற நோயாளிகளின் எண்ணிக்கை :

| | |
|---|---|
| ஆண்கள் | 1015 |
| பெண்கள் | 932 |
| குழந்தைகள் | 894 |
| | 2841 |

குறிப்பு :-

I was attacked of "Iritis" and was having treatment in the allopathic system. A well known specialist of the eye disease from Kumbakonam was attending me.

Inspite of the treatment for more than two months I did not feel any improvement. Also I started losing my hopes when I found the medicine was repeated thrice.

The condition of the disease was very fightening. My right eye was completely covered with reddish colour and the sight was also not clear.

To my good fortune I came into contact with this hospital accidentaly. Hardly I took a weeks medicine resulting in a miracular change for the eye and the sight.

I whole heartedly thank His Holiness Dharmapura Adhinam for having opened such a hospital and help the dejected and deserted patients. The Doctor in charge of the hospital Sri K Ramakrishnan is so kind in his enquiring and very pleasing for a patient's agonished mind.

I pray Sri Muthukumaraswamy to bless him with all the conveniances he may require in his life.

(Sd) E. Ponnappan, B. com.
E. O., H. R. & C. E.
Tiruppungur Temple.
20—6—66.

## திருச்சிராப்பள்ளி கும்பாபிஷேக விழாவில்

# திருமுறை மகாநாடு — சிவபூஜை மகாநாடு

திருச்சிராப்பள்ளி மலைக்கோயில் ஸ்ரீ மட்டுவார்குழலம்மை உடனுறை ஸ்ரீ தாயுமானசுவாமி திருக்கோயில் மகாகும்பாபிஷேகம் 29—8—66 திங்கட்கிழமை காலை 6 மணிக்குமேல் 7 மணிக்குள் திருத்தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானத்தின் தலைமையிலும், மதுரைத் திருஞானசம்பந்தர் ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம், சென்னைமாநில அறநிலைய ஆணையர் திரு. M. S. சாரங்கபாணி முதலியார், துணை ஆணையர் திரு. A. மார்க்கண்டவேல்ராஜன் முன்னிலையிலும் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

டாக்டர். திரு. V. K. அரங்கநாதன், M. P, P. L., அவர்களைத் தலைவராகக் கொண்ட திருப்பணிக் குழு மூன்றுண்டுகளுக்கு மேலாக முயற்சிசெய்து, சேங்காலிபுரம் பிரம்மஸ்ரீ. அனந்தராம தீக்ஷிதர், திருமதி. சிவாநந்த விஜயலக்ஷ்மி முதலியவர்கள் கதாகாலட்சேபம் நடத்தியதன் மூலமாகவும், அகில இந்திய தமிழ் எழுத்தாளர், மன்றச் செயலர் திரு. அ. வெ. ர. கிருஷ்ணசாமி ரெட்டியார் கோஷ்டியினரின் வீதிபஜனை மூலமாகவும் திருச்சிநகரைத் தாண்டாமல், திருச்சிநகர எல்லையிலேயே 2½ லக்ஷத்திற்குமேல் நிதி வசூல்செய்து திருப்பணிகள் செய்தும், வர்ணம் வைத்தும், திருத்தருமையாதீனம் பாணியில் யாகசாலை அமைத்தும். தக்கவர்கள் உதவியால் வேத பாராயணம், திருமுறைப் பாராயணம் நடத்திவைத்தும் சிறப்பித்தனர். தருமையாதீனத்தைச் சார்ந்த மௌன மடம் கட்டளையின் சார்பில் ஸ்ரீ தாயுமானுர் ஆலயத்திற்கு இரண்டு காலம் பூஜை சிறப்புற நடைபெறுவதையும், மற்றும் ஆலயத் தொடர்பையும் அறிந்த திருப்பணிக்குழுவினர் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களைக் கும்பாபிஷேக விழாவிற்குத் தலைமை வகிக்க வேண்டினர். வேண்டுகோட்கு இணங்கி ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களும் திருச்சி மலைக்கோட்டைக்கு எழுந்தருளி, மௌன மடத்தின் சார்பில் சித்திர மண்டபத் திருப்பணியையும், மௌன மடம் கட்டளை சார்பில் அஷ்டபந்தனமும், அம்பாளுக்கு ரஜதபந்தனமும் செய்வித்தும், திருமுறை மகாநாடு, சிவபூஜகர் மகாநாடு, திருமுறை அகண்ட பாராயண்ம் முதலியவற்றை ஏற்று நடத்திவைத்தும் சிறப்பித்தருளினுர்கள். அறங்காவலர்களான திரு. A. முத்துக்குமாரன், திரு. R. கிருஷ்ணசாமி ரெட்டியார் திரு. ப. பிச்சைக்காரன், நிர்வாக அதிகாரி திரு. S. மகராஜன்

முதலியோரின் ஒத்துழைப்பும், அறநிலைய இலாகாவின் ஒத்துழைப்பும், உறுப்பினர் திரு. கைலாசம் அய்யர் ஒத்துழைப்பும் சிறப்பிற்குக் காரணமாயிருந்தது.

மகாநாடு :

26—8—66 காலை 7 மணிக்குச் சிவபூசகர் ஐம்பதின்மருக்கு மேல் ஸ்ரீலஸ்ரீ மீனாக்ஷிசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள் தலைமையில் காவிரியில் நீராடி, மேலச் சிந்தாமணியிலிருந்து யானை முதலிய எடுபிடிகளுடன் ஊர்வலமாக சிவபுராண படனத்துடன் மலைக்கோயில் நூற்றுக்கால் மண்டபத்தை அடைந்தனர். ஐம்பதின்மர் ஒருசேரச் சிவபூஜை செய்யும் காட்சி கண்டவர் உள்ளங்களைக் களிப்பில் ஆழ்த்தியது. சிவபூசை பூர்த்தியானவுடன் சிவபூசகர்கள் அனைவரும் யாகசாலை முன்னிலையில் பன்னிரு திருமுறைகளையும் பாராணம் செய்து நான்கு தினங்களுக்குள் பூர்த்தி செய்தனர். நான்கு நாட்களிலும் காலையில் சிவபூசனையும், பன்னிரு திருமுறைப் பாராயணமும் புரிந்தமை எல்லோரையும் மகிழ்ச்சியில் ஈடுபடுத்தியது.

26—8—66 மாலை முதலில் இசைத் தமிழ் மணி, திரு. M. சுப்பிரமணியமுதலியார், பண்ணிசைமணி திரு. T. சுந்தரேச தேசிகர் குழுவினர் "திருமுறை இசையரங்கு" மூலம் கடவுள் வணக்கம் நிகழ்த்தினர். வித்துவான். ஸ்ரீமத். மௌன. சோம சுந்தரத் தம்பிரான் சுவாமிகள் வரவேற்புரை நிகழ்த்தினார்கள். நிகழ்த்துகையில் இன்று அரசியல் மகாநாடும், திருமுறை மகாநாடும் திருச்சியில் நடைபெறுவது அரசியலுக்கு இன்றியமையாதது என்பதை எடுத்துக்காட்டுகிறது என்றும், அருளியல் சிதம்பர ரகசியம் போன்றது, அரசியல் நடராஜர் வடிவம் போன்றது என்றும், அருளியல் நெஞ்சைத் திருத்துவது. அரசியல் கை கால்களைத் திருத்துவது என்றும், அரசியல் சிறக்க அருளியல் இன்றியமையாததென்பதை எடுத்துக் காட்டுகிறது என்றும் குறிப்பிட்டு அனைவரையும் வரவேற்றார்கள். மகாநாட்டிற்குத் தலைமை வகித்த திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் பிறந்தால் முத்தி; நினைத்தால் முத்தி தரும் தலங்களைப்போல சொன்னால் முத்தி தரும் தலம் திருச்சிராப்பள்ளி என்றும், இதனைத் திருஞானசம்பந்தர் "குன்றுடையானைக் கூற என்னுள்ளம் குளிரும்மே" என்று பாடுகிறார் என்றும், ஒரே கல்லாலான மலை இத் திரிசிராமலை என்றும், வாழ்வாங்கு வாழ வழி வகுப்பது திருமுறை என்றும் குறிப்பிட்டார்கள்.

மகாநாட்டைத் தொடங்கிவைத்த சென்னைமாநிலக்கூட்டுறவு அமைச்சர் கனம். திரு. நல்லசேனாபதி சர்க்கரை மன்றாடியார்

அவர்கள் நாட்டின் நலத்திற்கு மக்களிடையில் தெய்வ பக்தி மிகவும் அவசியம் என்றும், அப்பக்தியைத் திருமுறைகள் உரமிட்டு வளர்க்க உதவும் என்றும் குறிப்பிட்டார்கள்.

வேலூர் திரு. K. இராமநாத ஆச்சாரியார் "முதல் திருமுறை" பற்றியும், திருச்சி நகர அருள்நெறித் திருக்கூட்டச் செயலாளர் திரு. சொ. கிருஷ்ணன் "இரண்டாந் திருமுறை" பற்றியும், புதுக்கோட்டை திருமதி. சிவ. பிருந்தாதேவி "மூன்றுந் திருமுறை" பற்றியும், வித்துவான். ஸ்ரீமத் மௌன. சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் "நான்காந் திருமுறை" பற்றியும் அரிய விரிவுரை நிகழ்த்தினர்கள். தருமையாதீன வித்துவான், ஸ்ரீரங்கம், எம்பார், திரு. S. விஜயராகவாச்சாரியார் குழுவினர் "சுந்தரர்" பற்றி இன்னிசைக் கதாகாலட்சேபம் நிகழ்த்தி அனைவரையும் மகிழ்வித்தார்.

27-8-66 மகாநாட்டின் இரண்டாவது நாள் திருநாவுக்கரசர் திருநாளாகக் கொண்டாடப்பட்டது. 5-30 மணிக்கு சங்கீத பூஷணம், திரு. P. சுவாமிநாதன், தேவார இசைமணி, திரு. S. திருஞானசம்பந்தம் குழுவினர் "திருமுறை இசையரங்கு" மூலம் கடவுள் வணக்கம் நிகழ்த்தினர்.

வித்துவான். ஸ்ரீமத். மௌன. சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் வரவேற்புரை கூறினர்கள். திருக்குறள்வேள். திரு. G. வரதராஜப் பிள்ளை மகாநாட்டிற்குத் தலைமை வகித்து அறவுரை கூறினர்கள். சிதம்பரம் R. C. T. உயர்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியர், திரு. பு. ர. சுவாமிநாதன் M. A, L. T., "ஐந்தாந் திருமுறை" பற்றியும், திருச்சி ஜமால் முகம்மது கல்லூரி ஆசிரியர், திரு. ஆதி. முருகவேள் M. A., "ஆறுந் திருமுறை" பற்றியும், போத்தனூர் திரு. மாணிக்கவாசகம் "ஏழாந் திருமுறை" பற்றியும், திருமதி. இராஜேஸ்வரி சுவாமிநாதன் "எட்டாந் திருமுறை" பற்றியும் அரிய ஆராய்ச்சியுரை நிகழ்த்தினர். சென்னை சமர்த்த கண்டாபரண குமாரி, கௌரி குழுவினர் "மாணிக்கவாசகர்" இன்னிசைக் கதாகாலட்சேபம் நிகழ்த்தி அனைவரையும் மகிழ்வித்தனர்.

28—8—66 மகாநாட்டின் மூன்றுவதுநாள் சுந்தரர் திருநாளாகக் கொண்டாடப்பெற்றது. திருச்செந்தூர், திரு. S. நமச்சிவாயம், திரு. இரத்தினசபாபதி குழுவினர் "திருமுறை இசையரங்கு" மூலம் கடவுள் வணக்கம் நிகழ்த்தினர். வித்துவான். ஸ்ரீமத். மௌன. சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் வரவேற்புரை கூறினர்கள். பதுவை மாநிலக் கல்வி நிதி

அமைச்சர், கனம். A. S. காங்கேயன் அவர்கள் தலைமையுரை நிகழ்த்தினார்கள். நிகழ்த்தும்போது ஆலயத் திருப்பணி, கும்பாபிஷேகம் முதலியன ஆன்மீக சக்தி வளர்வதற்குப் பெருந் துணை செய்வன என்று குறிப்பிட்டார்கள்.

தருமையாதீனப் புலவர், திரு. இராம. கோவிந்தசாமிப் பிள்ளை "மௌனகுரு வணக்கம்" என்பதுபற்றியும், திருமுறைக் கலைஞர், திரு. தி. பட்டுச்சாமி ஓதுவார் "தாயுமானவர் பாடல்கள்" என்பது பற்றியும் அரிய விரிவுரை நிகழ்த்தினார்கள்.

மாலை 5 30 மணிக்குத் திருவாவடுதுறை, திரு T. M. விசுவலிங்கம், திரு. T. M. சபாபதி சகோதரர்கள் "திருமுறை இசையரங்கு" மூலம் கடவுள் வணக்கம் நிகழ்த்தினர். வித்துவான், ஸ்ரீமத். மௌன சோமசுந்தர த்தம்பிரான்சுவாமிகள் வரவேற்றுப் பேசினார்கள். சென்னை உயர் நீதிமன்ற நீதிபதி, கனம். திரு. R. சதாசிவம் அவர்கள் மகாநாட்டிற்குத் தலைமை வகித்தார்கள். தலைமையுரையில் இறைவன் தந்தையும், தாயுமாக நமக்குத் துணை புரிகின்றான் என்ற உண்மையை இத் தலம் விளக்குகிறது என்றும், குடமுழுக்கு விழாவையொட்டி இத்தகைய மகாநாடு நடைபெறுவது மக்களிடையே பக்திச் சுவையை உண்டுபண்ண உதவியாயிருக்கும் என்றும் குறிப்பிட்டார்கள். வேலூர், திரு. K. இராமநாத ஆச்சாரியார் "ஒன்பதாந் திருமுறை" பற்றியும், உபந்நியாசசக்கரவர்த்தி, சேங்காலிபுரம், பிர்மஸ்ரீ. அனந்தராம தீக்ஷிதர் "சிவநாம மகிமை" பற்றியும் அரிய விரிவுரை நிகழ்த்தினார்கள். குளித்தலை முருகனடி வில்லுப்பாட்டுக் குழுவினர் 'திருநாவுக்கரசர்" பற்றி வில்லிசை நிகழ்த்தி அனைவரையும் மகிழ்வித்தனர்.

29—8—66 விடியற்காலை 6 மணிக்குமேல் 7 மணிக்குள் ஸ்ரீ மட்டுவார்குழலம்மை உடனுறை ஸ்ரீ தாயுமானவர் மகாகும்பாபிஷேக தரிசனம் எல்லோரும் பெற்றனர். கும்பாபிஷேக நிகழ்ச்சிகளை திருச்சி அகில இந்திய வானொலி நிலையத்தார் உடன் நிகழ்ச்சி வருணனை செய்து கும்பாபிஷேக தரிசனத்துக்கு அங்குவர இயலாது பல ஊர்களிலும் உள்ள அன்பர்களும் கேட்டு மகிழச் செய்தார்கள். முற்பகலிலேயே பெரிய திட்டத்தில் மகா அபிஷேகம் நடைபெற்றது. பல ஆஸ்திக அன்பர்களும் இதில் ஈடுபட்டு காணிக்கையாக அபிஷேக திரவியங்கள் பழங்கள் முதலியன வழங்கியும், தொண்டு செய்தும் தரிசித்து மகிழ்ந்தார்கள். காலை 9.30 மணிக்கு சங்கீத பூஷணம், திரு. P. சுவாமிநாதன் குழுவினர் "திருமுறை இசையரங்கு", மூலம் கடவுள் வணக்கம் நிகழ்த்தினர். மகாநாட்டிற்கு மதுரை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் தலைமைவகித்

திருச்சி - மலைக்கோட்டை ஸ்ரீ தாயுமானேசுவரர் திருக்கோயில்
மகாகும்பாபிஷேகம்



தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களுடன்
சென்னை இந்து சமய அறநிலைய ஆணையர், துணை ஆணையர்,
ஆலயத் திருப்பணிக் குழுவினர்,
மதுரை திருஞானசம்பந்தர் ஆதீனம்
ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள்

திருச்சி மலைக்கோட்டை ஸ்ரீ தாயுமானேஸ்வரர் திருக்கோயில்
மகாகும்பாபிஷேகம் ( 29—8—'66 )



யாகசாலையிலிருந்து கடம் எழுந்தருளல்

தார்கள். தலைமையுரையில் அவரவர் வினைக்கீடாக இறைவனால் நமக்கு இன்பத்துன்பங்கள் அளிக்கப்படுகின்றன என்றும், இறை வழிபாட்டால் துன்பங்களை இன்பமாக மாற்ற இயலும் என்றும் குறிப்பிட்டார்கள். மகாவித்துவான். தருமையாதீனப் புலவர், திரு. சி. அருணைவடிவேல் முதலியார் ''பத்தாந் திருமுறை'' பற்றியும், 'திருக்கோயில்' ஆசிரியர், திரு. N. R. முருகவேள் M. A., M. O. L., ''பதினோராந் திருமுறை'' பற்றியும் சிறந்த முறையில் விரிவுரை ஆற்றினார்கள்.

மாலை 5-30 மணிக்குத் தேவார இசைமணி, திரு. V. இலக்குமணன், திரு. N. சுவாமிநாதன் குழுவினர் ''திருமுறை இசையரங்கு'' மூலம் கடவுள் வணக்கம் பாடினர். வித்துவான். ஸ்ரீமத். மௌன. சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அனைவரையும் வரவேற்றார்கள். சென்னைமாநில இந்து சமய அறநிலைய ஆணையர், திரு. M. S. சாரங்கபாணி முதலியார் B. A., B. L., அவர்கள் மகாநாட்டிற்குத் தலைமை வகித்தார்கள். தலைமையுரையில் திருப்பணி செய்ய வேண்டியதன் அவசியத்தையும், கும்பாபிஷேகத்தின் இன்றியமையாமையையும் விளக்கித் திருப்பணிக் கமிட்டியாரைப் பாராட்டினார்கள். இச் சந்தர்ப்பத்தில் தருமையாதீனம் இம் மகாநாடு நடத்துவது பொருத்தமானது என்றும் குறிப்பிட்டார்கள். தஞ்சை, அறநிலையத் துறைத் துணை ஆணையர், திரு A, மார்க்கண்டவேல் ராஜன் அவர்கள் ''நாம பஜனைத் தத்துவம்'' பற்றி உரையாற்றி பஜனையும் நிகழ்த்தினார்கள். திருமதி. சிவானந்த விஜயலக்ஷ்மி ''பன்னிரண்டாந் திருமுறையில் - பூசலார் நாயனார்'' பற்றியும், ''பார்வதி திருமணம்'' பற்றியும் இன்னிசை விரிவுரை நிகழ்த்தினார்கள்.

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியின் ஆசீர்வாதமான பட்டாடையைத் துணை ஆணையர் திரு. A. மார்க்கண்டவேல் ராஜன் அவர்கள், திருமதி. சிவானந்த விஜயலக்ஷ்மி அவர்கட்கு அளித்தார்கள். அன்று காலை ஸ்ரீ மாணிக்கவிநாயகர் ஆலயத்தில் சேங்காலிபுரம், பிர்மஸ்ரீ. அனந்தராம தீக்ஷிதர் அவர்கட்குத் தருமையாதீன ஆசீர்வாதமாக வித்துவான். ஸ்ரீமத். மௌன. சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் தீக்ஷிதர் அவர்கட்குப் பொன்னாடை போர்த்தி, தீக்ஷிதரும், சிவானந்த விஜயலக்ஷ்மியும் திருப்பணிக்கு உதவியதைப் பாராட்டினார்கள். இரவு சுவாமி திருவீதியுலாவில் தருமையாதீனச் சார்பிலும், திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்தின் சார்பிலும், உறையூர் திருமுறை அன்பர் திரு. A. அருணாசல முதலியார் சார்பிலும் ஐம்பதுக்கு மேற்பட்ட சிறந்த ஓதுவாமூர்த்திகள் பலர் இன்னிசைத் திருமுறைப் பாராயணம் நிகழ்த்திச் சிறப்பித்தனர்.

# செய்திகள்

## திருத்தருமையாதீனத்தில்

## மகாகயிலாயக் காட்சி ஏழாவது ஆண்டுவிழா.

திருத்தருமையாதீனம் 25-ஆவது ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானம் அவர்கள் வடக்கேயுள்ள கயிலாய மலைக்குச் சென்று தரிசித்து கயிலாய பரம்பரையை நிறுவிய நாள் ஆடி அமாவாசை. அப்புண்ணிய தினத்தில் ஆண்டுதோறும் சிறப்பு வழிபாடு நிகழ்த்துவதுபோல் இவ்வாண்டும் 16-8-66 செவ்வாய்க்கிழமை ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் பூஜைமடத்தில் திருக்கயிலாயத் திருவுருவப் படத்திற்கு காலை மாலை இருவேளைகளிலும் சிறப்பு வழிபாடு நிகழ்த்தப்பெற்றது. சிவஞானபோதம் என்ற நூல் வெளியிட்டு வழங்கப்பெற்றது. நண்பகலில் மாகேசுவர பூஜையும் சிறப்புற நிகழ்ந்தது. மாலை 6-மணிமுதல் பூஜை மடத்தில் சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பெற்றன.

தருமையாதீனப் பல்கலைக் கல்லூரிப் பொறுப்பு முதல்வர், வித்துவான், திரு. வி. சா. குருசாமி தேசிகர், பேராசிரியர்களில் மகாவித்துவான், திரு. சி. அருணைவடிவேல் முதலியார், வித்துவான், திரு. வி. சபேசன் ஆகியோர் முறையே கயிலைகண்ட அடியார்கள், கயிலைக் காட்சிகள், கயிலைத் திருமுறை என்ற தலைப்புக்களில் சொற்பொழிவாற்றினர். காலை முதல் திருமுறைப் பாராயணம் ஆதீன ஓதுவாமூர்த்திகளால் செய்யப்பெற்றது. இரவு 8-மணிக்கு மின்விளக்குகளால் ஒப்பனை செய்யப்பெற்ற வெள்ளியிரதத்தில் திருக்கயிலாயத் திருவுருவப்படத் திருவீதியுலா நிகழ்ந்தது. கயிலாய நிலையத்தில் திருமுறைப் பாராயணத்துடன் வழிபாடு செய்து அன்பர்களுக்குப் பிரசாதங்கள் வழங்கப்பெற்றன. ஆச்சாள்புரம் தேவஸ்தானம் ஓதுவார் திரு. காசிநாத தேசிகர் அவர்களுக்கு ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் பொன்னாடை வழங்கியருளினார்கள். மாயூரம் முதலிய இடங்களிலிருந்து பெருமக்கள் பலர் வந்து திருவீதியுலாவிலும் வழிபாட்டிலும் கலந்துகொண்டார்கள். ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானம் அவர்களும் திருவீதியுலாவில் உடன் எழுந்தருளி திருக்காட்சி வழங்கியருளினார்கள்.

# ஆவணிமூல விழாவும் கல்வி நிலையங்களின் ஆண்டு விழாவும்

25—8—66 வியாழக்கிழமை தருமையும் கமலையும் விரிதமிழ்க் கூடலும் திருநகராக அரசுவீற்றிருக்கும் ஆலவாய்ப்பெருமானின் சிறப்புத் திருநாளாகிய ஆவணிமூலத் திருநாள். இத் திருநாளை யொட்டி பத்து நாட்கள் ஆதீனத்தின் ஆன்மார்த்த மூர்த்தி யாகிய ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானுக்குச் சிறப்பு வழிபாடுகள் நிகழ்த்தப்பெற்றன.

ஆவணிமூல விழாவை யொட்டி ஆதீனக் கல்வி நிலையங் களின் ஆண்டு விழா நிகழ்ந்தது. 23—8—66 செவ்வாய்க் கிழமை ஸ்ரீ குருஞானசம்பந்தர் தொடக்கப்பள்ளி, வேத சிவாகம பாடசாலைகளின் ஆண்டுவிழா மாலை 3 மணி அளவில் தொடங்கப் பெற்றது. தருமையாதீனப் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியை, வித்துவான், திருமதி. ப. நீலா அவர்களும், தருமையாதீனப் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியர், சிரோமணி, வித்துவான், திரு. வி. சபேசன் அவர்களும் முறையே, "மதுரையும் வந்தியும்", சொக்கேசனும் தமிழ்ச் சங்கமும்" என்ற தலைப்புக்களில் சொற்பொழிவாற்றினர். தொடக்கப்பள்ளி மாணவ மாணவியர் களின் கலை நிகழ்ச்சியோடு விழா இனிது நிறைவுற்றது.

24—8—66 புதன்கிழமை ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர் பள்ளி, தேவாரப் பாடசாலைகளின் ஆண்டு விழா மாலை 3 மணி அளவில் நிகழ்ந்தது. தருமையாதீனப் பல்கலைக் கல்லூரிப் பொறுப்பு முதல்வர், திருநெறிச் செம்மல், வித்துவான், திரு. வி. சா. குருசாமி தேசிகர் அவர்களும், தருமையாதீனப் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியர், மகாவித்துவான், திரு. சி. அருணை வடிவேல் முதலியார் அவர்களும், திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடே சுவரசுவாமி தேவஸ்தானம் கட்டளை விசாரணை, வித்துவான், ஸ்ரீமத். சுவாமிநாதத்தம்பிரான் சுவாமிகள் அவர்களும் முறையே "திருஞானசம்பந்தரும் தெய்வப் பாவையும்", "மதுரையும் பரஞ்சோதியாரும்", "குமரகுருபரரும் மதுரையும்" என்ற தலைப்புக்களில் சொற்பொழிவாற்றினர்.

25—8—66 வியாழக்கிழமை ஆவணிமூலத் திருநாள் அன்று காலை மாலை இருவேளைகளிலும் வழிபாடு நிகழ்த்தப்பெற்றது. ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் திருத்தேரில் நாள்முழுவதும் திருக் காட்சி வழங்கினர். விழா மலராகப் பழமொழி விளக்கம் என் னும் "தண்டலையார் சதகம்" வெளியிட்டு வழங்கப்பெற்றது.

அன்று மாலையில் செந்தமிழ்ச் சொக்கரின் விழாவில், செந்தமிழ்ப் புலவர் ஒருவர்க்குப் பட்டம் அளித்து பாராட்டுவதுபோல் இவ் வாண்டும் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் காஞ்சிபுரம், பச்சையப்பன் உயர்பள்ளி முன்னாள் தலைமை ஆசிரியர், திரு. க. வச்சிரவேல் முதலியார் B. A., L. T., அவர் கட்குச் "சித்தாந்தக் கலைச் செல்வர்" என்னும் சிறப்புப் பட்டம் வழங்கி, பொன்னாடை போர்த்தி ஆசி அருளினார்கள். ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் மோனத் தவமிருக்கும் நாள் ஆதலின் ஆசியுரை அச்சிட்டு வழங்கப்பெற்றது. ஆசியுரையை மகாவித்துவான், திரு. சி. அருணைவடிவேல் முதலியார் அவர்கள் வாசித்தார்கள். இன்றையநாள் ஆதீனப் பல்கலைக் கல்லூரியின் ஆண்டு விழாவாகவும் அமைந்தது.

வித்துவான், ஸ்ரீமத். சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகள் அனைவரையும் வரவேற்றார்கள். அடுத்து கல்லூரிப் பொறுப்பு முதல்வர், திரு. வி. சா. குருசாமி தேசிகர் விழாவிற்கு வந்திருந்த வாழ்த்துச் செய்திகளை வாசித்து கல்லூரி ஆண்டு அறிக்கையை யும் வாசித்தார்கள். பின்னர் கல்வி நிலையங்களின் தலைமை ஆசிரியர்கள் ஆண்டு அறிக்கைகளை வாசித்தார்கள். கல்வி நிலையங்களின் வகுப்புக்களில் முதன்மையாகத் தேர்ச்சியுற்ற மாணவ மாணவிகளுக்கு ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் பரிசுகளை வழங்கியருளினார்கள். பின்னர் செஞ்சொற் கொண்டல், வித்துவான், திரு. சொ. சிங்காரவேலனார் M. A., Dip. Ling. அவர்கள் "குருஞானசம்பந்தரும் மதுரையும்" என்ற தலைப்பில் வரலாற்று ஆராய்ச்சியுடன் பேசினார்கள். பின்னர் சிறப்புப்பட்டம் பெற்ற திரு. க. வச்சிரவேல் முதலியார் B. A., L. T., அவர்கள் சிறப்புரைக்குப் பின்னர் நன்றியுரை கடவுள் வாழ்த்துடன் விழா இனிது நிறைவுற்றது.

### சென்னை, தருமையாதீன மடாலய தேவாலய சமயப் பிரசார நிலையச் சார்பில்

## திருச்சியில் மாதாந்தர வழிபாடு

சென்னை, தருமபுர ஆதீன மடாலய தேவாலய சமயப் பிரசார நிலையத்தின் மாதாந்தர சமயப் பிரசார வழிபாடு 28—8-66 ஞாயிற்றுக்கிழமை மாலை 4 மணிக்குத் திருச்சிராப்பள்ளி மலைக் கோயில் ஸ்ரீ மட்டுவார்குழலம்மை உடனுறை ஸ்ரீ தாயுமானசுவாமி ஆலயத்தில் சிறப்பாக நடைபெற்றது. திருச்சி மலைக்கோட்டை மௌனகுரு வழிபாட்டுக் கழகத்தார், தில்லைத் திருமுறைக் கழ கத்தார், திருச்சிநகர அருள்நெறித் திருக்கூட்டத்தார் மற்றும்

பல அன்பர்கள் வழிபாட்டில் கலந்துகொண்டனர். சங்கீத பூஷணம், திரு. P. சுவாமிநாதன், திரு. S. திருஞானசம்பந்தம், திரு. M. சுப்பிரமணிய முதலியார், திரு. சுந்தரேச தேசிகர், திரு. T. சோமசுந்தர தேசிகர், திரு. S. நமச்சிவாயம், திரு. இரத்தினசபாபதி, திரு. T. M. விசுவலிங்கம், சபாபதி சகோதரர்கள் முதலிய பல ஓதுவாமூர்த்திகளும் கலந்துகொண்டு தேவாரத் திருமுறை ஓதி வழிபாட்டைச் சிறப்பித்தார்கள்.

வழிபாட்டுக் குழுவினர் அனைவரும் மௌனமடம் ஸ்ரீ முத்துக் குமாரர் சந்நிதியிலிருந்து சிவபுராணம் ஓதிக்கொண்டே மலை ஏறினர். மகாகும்பாபிஷேகத்தை முன்னிட்டு சுவாமி அம்பாள் முதலிய மூர்த்திகள் கலாகர்ஷணம் செய்யப்பட்டு யாகசாலையில் இருந்தமையால் மூலத்தானத் திருவுருவங்களையும் வணங்கி வழிபட்டனர். பிறகு, யாகசாலையை வலம் வந்து விநாயகர், சுவாமி, அம்பாள் முதலிய மூர்த்திகட்கு அர்ச்சனை செய்து முறையாக வழிபாடியற்றினர். தேவஸ்தான சிவாசாரியர்கள் வழிபாட்டுக் குழுவினரை வரவேற்று வழிபாட்டைச் சிறப்பாக நடத்திக்கொடுத்தனர். வித்துவான். ஸ்ரீமத். மௌன. சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் மூர்த்தி, தல, தீர்த்தச் சிறப்புக்களைக் குழுவினருக்கு விளக்கிச் சொன்னார்கள்.

## சுந்தரர் குருபூஜை விழா

சென்னை, தருமபுர ஆதீன மடாலய தேவாலய சமயப் பிரசார நிலையத்தில் 25—7—1966 சுவாதியன்று மாலை சுந்தரமூர்த்தி சுவாமிகள் குருபூஜை விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. சங்கீதபூஷணம் திரு. வி. எஸ். ஞானஸ்கந்தன் கடவுள் வணக்கம் பாடினார். கலைமகள் ஆசிரியர் திரு. கி. வா. ஜகந்நாதன் தலைமையுரை நிகழ்த்தினார். நிகழ்த்துகையில் சுந்தரருக்கு இறைவன் தோழராயிருந்தது போல் பாரதத்தில் அர்ஜுனனுக்குக் கிருஷ்ண பகவான் தோழராயிருந்தார். சுந்தரருக்காக இறைவன் பரவையாரிடம் தூது சென்று ஒற்றுமைப்படுத்தியதுபோல் கிருஷ்ணன் தன் தங்கை சுபத்திரையை அர்ஜுனனுக்குத் திருமணம் செய்து வைத்தார் என்று இரண்டிற்கும் உள்ள இயைபை விளக்கினார். திரு. கொத்தமங்கலம் சுப்பு சுந்தரர் வரலாறு பற்றி விளக்கிப் பேசினார். ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் வரவேற்புரையும், நன்றியுரை கூறும்போது திருத்தொண்டத்தொகை பாடிய நாயன்மார்களைத் தமிழ் நாட்டிற்கு அறிவிக்கவும், தமக்கு முன் வாழ்ந்த பெரியார்களிடத்தில் பக்தி மரியாதையுடன் நடக்க வேண்டும் என்பதை நடத்திக்காட்டவுமே சுந்தரர் அவதாரம் நிகழ்ந்தது என்று குறிப்பிட்டார்கள். இராமேஸ்வரம், மதுரை தீர்த்தப் பிரசாதமும், விபூதி, குங்குமப் பிரசாதமும் அன்பர்கட்கு வழங்கப்பட்டன.

# எதிர்காலம் -திரு. கே. முத்துஜோதிடர்

(பராபவஹூ புரட்டாசிமீ 1உ முதல் 30உ முடிய)
(17—9—66 முதல் 16—10—66 முடிய)

**1. மேஷம். அசுவதி - பரணி - கார்த்திகை $\frac{1}{4}$**

அசுவதி நக்ஷத்திரம் நான்கு பாதங்களும், பரணி நான்கு பாதங்களும் சுபசந்தோஷங்களை உண்டுபண்ணும். இல்லறசுகம் ஓங்கும். விசேஷ ஜீவன லாபம் ஏற்படும். கார்த்திகை 1ம் பாதம் மிகுந்த கவலைகளையும் நஷ்டத்தையும் தரும். சனி, செவ்வாய் சுபமாகும்.

**2. ரிஷபம். கார்த்திகை $\frac{3}{4}$ - ரோஹிணி - மிருகசீரிஷம் $\frac{1}{2}$**

ரிஷபராசி 9 பாதங்களும் விசேஷமான நன்மைகளைத்தரும், நூதன முறையில் ஜீவனலாபம் ஓங்கும். ஜீவனம் இல்லாதவர்களுக்கு ஜீவனத்தைத்தரும். வியவகாரம் வெற்றியடையும். கிராமாபிவிருத்தியும், சஸ்யதான்ய விருத்தியும் ஏற்படும். புதன், வியாழன் சுபமாகும்.

**3 மிதுனம் மிருகசீரிஷம் $\frac{1}{2}$ - திருவாதிரை - புனர்பூசம் $\frac{3}{4}$**

மிருகசீர்ஷம் 3, 4 பாதங்களும் திருவாதிரை நான்கு பாதங்களும் சுபத்தைத்தரும். இல்லறசுகம் ஓங்கும். ஆரோக்யம் உண்டாகும். உத்தியோகத்தில் மேல் பதவிகள் ஏற்படும். புனர்பூசம் 1, 2, 3 பாதங்கள் வியாதியால் மிகுந்த தொந்தரவைத்தரும். கிராமங்களில் சஸ்ய தான்யவிருத்திகளில் பலவிதமான இடைஞ்சல்கள் உண்டாகும். எதிர்பாராத நஷ்டங்களும் உண்டாகும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

**4. கடகம். புனர்பூசம் $\frac{1}{4}$ - பூசம் - ஆயில்யம்.**

புனர்பூசம் 4ம் பாதமும் பூசம் 1, 2 பாதங்களும் மிச்ர பலனைத்தரும். வரவு செலவு சமனாகும். தொல்லைகள் அதிகமாகும். வித்தியாவிருத்தியும், ஜீவன லாபமும் உண்டாகும். பூசம் 3, 4 பாதங்களும் ஆயில்யம் நான்கு பாதங்களும் விசேஷ

நன்மையைத்தரும். வியவகாரம் ஜெயிக்கும். நஷ்டமான பொருள் வந்துசேரும். குடும்பசுகம் ஓங்கும். கிராமாபிவிருத்தி ஏற்படும். வெள்ளி, சனி சுபமாகும்.

**5. சிம்மம். மகம் - பூரம் - உத்திரம் $\frac{1}{4}$**

மகம் நான்கு பாதங்களும், மிகுந்த சந்தோஷத்தைத் தரும். பூரம் நான்கு பாதங்களும் உத்திரம் முதல் பாதமும் நினைத்த காரியங்கள் தடைப்படும். வீண் செலவுகள் அதிகமாகும். அடிக்கடி அலைச்சல் உண்டாகும். புதன், வியாழன் சுபமாகும்.

**6. கன்னி. உத்திரம் $\frac{3}{4}$ - ஹஸ்தம் - சித்திரை $\frac{1}{2}$**

உத்திரம் 2, 3, 4 பாதங்கள் விசேஷ நன்மையும் லாபமும் தரும். ஆரோக்யம் உண்டுபண்ணும். ஹஸ்தம் நான்கு பாதங்களும், சித்திரை 1, 2 பாதங்களும் மிச்சிர பலனைத்தரும் தன தான்ய விரயங்கள் அதிகமாகும். மேலோர் பெரியோர்களின் அன்பு குறை காட்டும். ஈதிபாதைகள் அதிகமாகும். மனம் சந்தோஷம் இல்லாமல் இருந்துகொண்டு இருக்கும். ஆனாலும் தெய்வ பலமும் தபோபலமும் முன்னின்று காக்கும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

**7. துலாம். சித்திரை $\frac{1}{2}$, - சுவாதி - விசாகம் $\frac{3}{4}$.**

துலாராசி 9 பாதங்களும் மிச்சிரமான பலனைத்தரும். சுக துக்கங்கள் சமமாகும். குடும்பத் தொல்லைகள் ஜாஸ்தியாகும். வரவுக்குமேல் செலவு ஏற்படும். வைத்தியச்செலவும் அதிகமாகும். தெய்வபலம் முன்னின்று காக்கும், சனி, ஞாயிறு சுபமாகும்.

**8. விருச்சிகம். விசாகம் $\frac{1}{4}$-அனுஷம்-கேட்டை**

விருச்சிகராசி 9 பாதங்களும் சுபமேயாகும். உத்தியோகம் ஓங்கும். வித்தியாவிருத்தி ஏற்படும். இல்லறம் தழைக்கும். வியவகாரம் ஜெயிக்கும். ஸ்தாவர ஜெங்கம சொத்துக்கள் சேரும். சனி, புதன் சுபமாகும்.

**9. தனுசு. மூலம் - பூராடம் - உத்திராடம் $\frac{1}{4}$**

தனுர்ராசி 9 பாதங்களும் சுபமாகும். குடும்பத்தில் சுப சோபனுதிகளும் மங்கள காரியங்களும் தெய்வீகமான யக்ஞ யாகங்களும். கிராமாபிவிருத்தியும், புத்திராதிகளால் சுகமும் உண்டு பண்ணும். திங்கள், செய்வாய் சுபமாகும்.

**10. மகரம். உத்திராடம் $\frac{3}{4}$ - திருவோணம் - அவிட்டம் $\frac{1}{2}$**

உத்திராடம் 2, 3 4 பாதங்களும் திருவோணம் நான்கு பாதங்களும் ஆரோக்யத்தைத்தரும். நஷ்டமான பொருள் தானுக வந்துசேரும். ஜீவனம் ஓங்கும். மேல் பதவிகள் கிடைக்கும். அவிட்டம் 1, 2 பாதங்கள் சுகக் குறைவை உண்டு பண்ணும். விரோதிகளால் இடைஞ்சல்கள் ஏற்படும். மனம் நிம்மதியிராது சனி, செவ்வாய் சுபமாகும்.

**11. கும்பம் - அவிட்டம் $\frac{1}{2}$, சதயம் - பூரட்டாதி $\frac{3}{4}$.**

ஆரோக்யம் உண்டாகும். புத்திராதிகளால் நன்மை உண்டுபண்ணும். இடம் மாறுதலும் ஜீவன லாபமும் கிடைக்கும். வியவகாரம் ஜெயிக்கும். குடும்பம் ஓங்கும். சனி, வியாழன் சுபமாகும்.

**12. மீனம். பூரட்டாதி $\frac{1}{2}$ உத்திரட்டாதி - ரேவதி.**

மீனராசி 9 பாதங்களும் எதிர்பாராத ராஜயோகங்களைத் தரும். சுபசோபனங்களும், சஞ்சார பலத்தோடு லாபமும். நூதன முறையில் தொழில் விருத்தியும் ஆரோக்யமும், மேலோர் பெரியோர்களுடைய அன்பும் தெய்வ பலமும் எங்கும் பிரசித்தியும் ஏற்படச்செய்யும். இருப்பிடம் ஓங்கும். புதன், வியாழன் சுபமாகும்.

## முக்கிய கவனிப்பு

மேற்படி மாதத்தில் சனி, செவ்வாய்க்கும் சிம்ம ராசிகளில் சமசப்தகமும், ராசிக்குள்ளேயே குரு சனிக்கு அதிசார வக்ரமும் ஏற்படுவதால் உலகில் ஏற்படக்கூடிய இயற்கைகள் எல்லாம், மாறி மாறி நடக்கும்; உலகில் அமைதிக் குறைவும் துர்பிக்ஷ சூசனமும் அகால மரணங்களும சஸ்யவிருத்தி தான்ய விருத்திகளில் பலவிதமான இடைஞ்சல்களும் மகாஜனங்களுக்கு மனம் மாறுதல்களும் தெய்வ பலம் ஒதுங்கியும் நிற்தம். ஆங்காங்கு புண்ணியபூமிகளில் மேலோர்கள் பெரியோர்கள் தர்மிஷ்டர்கள் கனதனவான்கள் ஆஸ்திகர்கள் எல்லோரும், ஏராளமான தனம் வசூல்செய்து மேல்கண்ட துக்க நிவர்த்திக்காக புண்ணிய மகாநதீ தீரங்களிலும் மகாயக்ஞம்; லக்ஷ கோடி அர்ச்சனைகள் முதலியவைகளை சிரத்தாபக்தியோடு நடத்திவர சமஸ்த துக்கமும் நிவர்த்தியாகி பரசக்ர பயமும் நீங்கி சுபிக்ஷம் ஏற்பட்டு ராஜாங்கம் செழிக்கும்; கடவுள் காப்பார். சுபிக்ஷம் அடையும்.